குடும்பத்துடன் களிக்க...

# கல்கி



**3 புதிய தொடர்கள் ஆரம்பம்!**

KALKI
7.8.2005
ரூ.7.00
06 பக்கங்கள்

**ஆண்டு மலர்!**

அமரர் கல்கி
நினைவுச்
றுகதைப் போட்டி
முடிவுகள்!

# உலகின் முதல் 50,000 கலர் பட்டுப் புடவை




**பட்டில் இதுவரை நீங்கள் பார்த்திராத வண்ணமயமான சாதனை.**

ஒரேயொரு பட்டுப் புடவையில் 50,000 கலர்கள் – இன்னும் பெயரிடப்படாதவை சில; இதுவரை பட்டில் பார்க்காதவை பல! RmKVயால் டிசைன் செய்து நெய்யப்பட்ட இந்த அற்புதமான படைப்பின் ஒவ்வொரு பட்டிழையும் பாரம்பரிய சாய முறைகளாலும், எங்களது விஞ்ஞானமயமான சாய ஆலையின் அதிநவீன தொழில்நுட்பத்தாலும் வண்ணமயமான உயிராக்கம் பெற்றுள்ளது.

50,000 கலர்களையும் ஒன்றாக நெய்வதில் நாங்கள் வல்லமை பெற்றிருப்பதால், அரிதான கலர்களில் கூட வியக்க வைக்கும் பட்டுப் புடவைகளை இனி நீங்கள் பெற முடியும்.

கின்னஸ் சாதனையில் இடம் பெறப் போகும் உலகின் மிக அழகிய வண்ணமயமான பட்டுப் புடவையைக் காண உடன் வாருங்கள்.

RmKV
*Unique wedding silks*

பனகல் பார்க், சென்னை Ph 044 - 281 44445 • வடக்கு ரத வீதி, திருநெல்வேலி Ph 0462 - 2333105 www.rmkv.com

Mudra South: RmKV: 7321: 0

அடுத்த இதழில் ஆரம்பம்...

# சுனந்தாஜி

வழங்கும்
ஆன்மிகத் தொடர்

# வெற்றி உங்கள் சாய்ஸ்!



படியுங்கள்!

ஜெயித்துக் காட்டுங்கள்!

முதன் முறையாகத் தமிழில்...

## உள்ளே...


| | |
|---|---|
| தலையங்கம் | 13 |
| அமரர் கல்கி | 58 |
| அருள்வாக்கு | 66 |
| குறையொன்றுமில்லை | 80 |
| தராசு | 84 |
| நடக்குமென்பார்; நடக்கும்! | 92 |

# வட்டமேஜை

**பா**.ஜ.க. பொதுச் செயலாளர் ராஜாவின் பேட்டி 'சுரீர்' என்றிருந்தது. கல்கிக்கு அச்சவுணர்வு சிறிது கூடக் கிடையாது.
திருச்சி, இரா.க.பிரகாசம்

**இ**ல.கணேசன் அரசியலை விட்டு சமையல் கலைக்கு மாறிவிடப் போகிறார்!
நெய்வேலி, கே.வி.நாதன்

'**ஆ**தரவு, ஊக்கம் எதுவுமில்லாமல் எப்படி ஒலிம்பிக்கில் ஜெயிக்க முடியும்' என்ற கே.என்.ப்ரியாவின் கேள்வி நியாயமானது.
மதுரை, என்.பாலகிருஷ்ணன்

**எ**ட்டு நகைச்சுவைத் துணுக்குகளும் திருப்பதி லட்டுகளாய் இனித்தன.
புனலூர், வஸந்தா பரமசிவம்

'**தி**ல்லியிலே பட்டம் பறந்து கொண்டிருந்தாலும், நூல்கண்டு மயிலாடுதுறையில்தான் இருக்கிறது' என்கிற மணிசங்கர் அய்யரின் பேச்சு சூப்பர்!
லோயர் அணைக்கட்டு, பி. இராஜேந்திரன்

**பா**லசந்தரின் பேட்டியும் நீங்கள் கொடுத்த தலைப்பும் அழகாக இருந்தன. (இது 'பொய்'யில்லை!)
சென்னை, கே.தெய்வசிகாமணி

**எ**ங்களை முந்திக்கொண்டு முத்தான மூன்று கதைகளை கல்கி ஊழியர்கள் விமர்சித்திருந்தது 'பளிச்' என்றிருந்தது.
மதுரை, பி.எல்.பரமசிவம்

**பு**றா பெய்டு மெயில் வாசித்தேன். நீங்களும் புறாக்கள் மூலம், சந்தா நேயர்களுக்கு புத்தகம் அனுப்பலாமே!
கோவை, என்.கணேஷ்

**க**ல்கி தலையங்கம் அமெரிக்காவின் முகத்திரையைக் கிழித்துவிட்டது.
நாகர்கோவில், வேலுநாயுடு

## எனக்குப்

**சூ**ப்பர் ஸ்டாரின் வொள்ளு பேட்டி எங்களுக்குக் கிடைத்த 'லக் லக்' காமெடி!
திருச்சி, ஐ.பத்மா பூபதி

**பி**ரமுகர்களின் 'எனக்குப் பிடித்தது' வெளியிட்டு அசத்தியது, எனக்குப் பிடித்தது.
அயன்புரம், த.சத்தியநாராயணன்

**ஜெ**யலலிதா மன்னிப்புக் கேட்க வேண்டுமெனக் கோரும் பா.ஜ.க. பொதுச் செயலாளர் ஹெச்.ராஜா, 'தேவாலயத்திற்கும் மசூதிக்கும் செயல்படுத்தத் துணிவிருக்கிறதா' என்ற கேள்வியையும் எழுப்பியுள்ளார். காழ்ப்புணர்ச்சி கொண்டு மற்ற மதத்தை எதிர்ப்பதன் மூலம்தான் இந்து மதத்தைக் காப்பாற்ற முடியும் என்பது மூடநம்பிக்கை. ஜெயலலிதா மன்னிப்புக் கேட்க வேண்

## வாரம் ஒரு வாசகர்



**ப**த்துக் கேள்வி பரமுவை 'அந்நியன்' விக்ரம் போட்டுத் தாக்காமலிருந்தால் சரி.

**ஈரோடு, கு.ரவீந்திரன்**




டிய அவசியமே இல்லை. மன்னிப்புக் கேட்பதால் மட்டும் நன்மை நிகழ்ந்துவிடாது. கேட்காவிட்டாலும் தீமை எதுவும் நிகழ்ந்துவிடாது.

மதுரை, திரங்கசாமி

சேத்தனின் காதல் சிறகுகள் நெஞ்சைவிட்டு அகலாமல்

# பிடித்தது!

பதிந்து விட்டன.

நாகர்கோவில், இந்திரன்

'உன்னே ஓர் உமா' சிறுகதை உந்து சக்தி தரும் படைப்பாக மிளிர்ந்தது.

பொள்ளாச்சி, நாகராஜன்

கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடும் காதலின் சாகஸங்களை, இளமை 'கல்கி' கண் முன் கொண்டு வந்து நிறுத்தியது அழகு.

கு.கழுகாசலபுரம், எஸ்.ஏ.கேசவன்

24.07.05 கல்கி இதழில், க்ரைம் பஜார் என்ற தலைப்பில் வந்த செய்தியில், என்னை செல் போன் வியாபாரியாகச் சித்திரித்திருப்பது வேடிக்கையாகவும் வேதனைக்குரியதாகவும் உள்ளது. பர்மா பஜாரில் உள்ள என் கடையில், பழரச வியாபாரமும், எஸ்.டி.டி. - பி.சி.ஓ. சென்டரும் நடத்தி வருகிறேன். இப்பகுதியில் போக்குவரத்துச் சிக்கல் ஏற்பட்டால் காவல் துறைக்கு உதவுகிறேன்.

சென்னை, சந்துரு, சமூக சேவகர்

**கல்கி**

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.390/-
ஆறு மாதம் : ரூ.195/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 63.50 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2060/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

# தாங்காத வட்டி!

## – தொடரும் தயாரிப்பாளர்கள் தற்கொலை முயற்சி!



• தாணு



• தியாகராஜன்

**ப**ல வெற்றிப் படங்களைத் தயாரித்தத் ரோஜா கம்பைன்ஸ் காஜா மைதீன் அண்மையில் தமது மனைவியுடன் மேற்கொண்ட தற்கொலை முயற்சி, கோடம்பாக்கத்தை கிடுகிடுக்க வைத்திருக்கிறது. "காஜா தாக்குப் பிடிக்க முடியாமல் துணிந்துவிட்டார். பலர் உள்ளுக்குள்ளேயே புழுங்கிச் செத்துக் கொண்டிருக்கிறார்கள்" என்கிற கூக்குரலும் எழாமல் இல்லை. தயாரிப்பாளர்களுக்கு நெருக்கடி எந்த உருவத்தில் வருகிறது? கழுத்தை நெறிக்கும் கடன் சுமைக்குக் காரணம் வட்டியா? சம்பளத்தில் பாதியை அட்வான்ஸாகக் கேட்கும் ஹீரோக்களா? இல்லை, தயாரிப்பாளர்களே ஹீரோக்களின் சம்பளத்தைப் போட்டி போட்டு ஏற்றிவிட்டுத் தங்கள் தலையிலேயே மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்கிறார்களா? விடை தேடி நாம் புறப்பட்டபோது, அடுக்கடுக்காய் கிடைத்த தகவல்கள் அதிரவைத்தன.

எங்கே பிரச்னை ஆரம்பமாகிறது என்பதை புட்டுப் புட்டு வைத்தார் தமிழ்த் திரைப்படத் தயாரிப்பாளர் சங்கத் தலைவர் சத்யஜோதி ஃபிலிம்ஸ் தியாகராஜன்.

"என் அப்பா காலத்தில் தொடங்கி, படத் தயாரிப்பு முறையைப் பார்த்து வந்திருக்கிறேன். மொத்த பட நிர்வாகமும் தயாரிப்பாளர் கட்டுப்பாட்டில் இருந்ததுபோல் இப்போது இல்லை.

ஹீரோக்களின் கைகளுக்கு சினிமா உலகம் மாறிவிட்டது. இதனால் சிஸ்டமே தலைகீழாகிவிட்டது. இப்போது இயக்குனர் நேரே ஹீரோவிடம் போய் கதையைச் சொல்லி ஓ.கே. வாங்குகிறார். பிறகு அவர்கள் இருவரும் சேர்ந்து தொழில்நுட்பக் கலைஞர்களை முடிவு செய்கிறார்கள். அடுத்து படத்துக்கு யாரைத் தயாரிப்பாளராகப் போடுவது என்று யோசிக்கிறார்கள். நாம் கேட்கும்போது பணம் கொடுக்க வேண்டும். யோசிக்காமல் செலவு செய்ய வேண்டும். அப்படிப்பட்ட ஒருவர் தான் தயாரிப்பாளர். அவருக்கு சினிமா தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. இப்படி ஹீரோவாலும், இயக்குனராலும் தேர்வு செய்யப்படுகிற ஆளாக தயாரிப்பாளர் இருக்க விரும்பவில்லை என்றால், அவர் சினிமாவில் இருக்க முடியாது என்கிற நிலை மெல்ல மெல்ல உருவாகி வருகிறது. இந்த வகை தயாரிப்பாளர்களாகத்தான் நாங்கள் இன்று ஆகிவிட்டோம். படத்தின் முதல்



# துரத்தும் அட்வான்ஸ்!

காப்பி ரெடியாகி போட்டுக் காட்டப்படும் பொழுதுதான் கதையே எங்களுக்குத் தெரிய வருகிறது. அதற்கு முன்பு ஒரு தகவலாகத் தான் எங்களுக்குக் கதையைச் சொல்கிறார்கள்." என்று பெருமூச்சு விட்டவர், சற்று நிதானித்து விட்டு தொடர்ந்தார்...

"பிரபல ஹீரோக்கள் எங்களைத் தயாரிப்பாளராகத் தேர்வு செய்துவிட்டால் எங்கள் தேவைகளுக்காகவும், பணப்புழக்கத்துக்காகவும் அவர்கள் விதிக்கும் எல்லா நிர்ப்பந்தங்களையும் ஏற்றுக்கொண்டு அவர்களின் கட்டுப்பாட்டில் செயல்படுகிறோம். அவர்கள் கேட்கும் சம்பளத்துக்கு ஒப்புக் கொள்கிறோம். படத்தை முடிக்க ஒட்டு மொத்தமாக எவ்வளவு செலவாகும் என்பதைக் கூடப் பார்க்காமல் 'இந்த நடிகரை போட்டுவிட்டோம் லாபம் வந்துவிடும்' என்ற எதிர்பார்ப்பில், கணிசமான தொகையை அட்வான்ஸாகக் கொடுக்கிறோம். நாங்கள் தூங்கினாலும் வட்டி தூங்காமல் வளர்ந்துகொண்டே போகிறது. திடீரென்று பட வேலைகள் திட்டமிட்டபடி நடைபெறாமல் தாமதமானால், அதற்கு மூன்று காரணங்கள் உண்டு. தயாரிப்பாளரால் பணம் புரட்ட முடியாமல் போய்விடுவது ஒரு காரணம். இயக்குனர் முழு திரைக்கதையைத் தயார் செய்யாமல் படப்பிடிப்பு ஸ்தலத்துக்குப் போன பிறகு யோசித்துக் கொண்டிருந்தால் படப்பிடிப்பு தாமதமாகி வீண் செலவுகள் ஏறிக்கொண்டே போகும்.

இதைத் தவிர்க்க இயக்குனரும், தயாரிப்பாளரும் கணவன், மனைவி போல உட்கார்ந்து மனம் திறந்து பேச வேண்டும். ஆனால் இது நடப்பதில்லை. மீறிப் பேசினால் எங்கே ஹீரோவிடம் சொல்லிவிடுவாரோ என்ற தர்மசங்கடத்தில் மாட்டிக் கொண்டு, இயக்குனர் கூடுதலாக வைக்கும் செலவுகளை கடன் வாங்கிச் சமாளிப்போம். படம் எந்த அளவுக்குத் தாமதமாகிறதோ அந்த அளவுக்கு வட்டிச் சுமை ஏறி, வட்டி மட்டுமே ஹீரோவின் சம்பளம் அளவுக்கு உயர்ந்து விடும்.

இந்த இடத்தில் இன்னொரு ஆபத்தும் தயாரிப்பாளர்களுக்குக் காத்திருக்கிறது. சம்பந்தப்பட்ட ஹீரோவின் முந்தைய படம் வெற்றி பெற்றிருந்தால் எங்களுக்குப் பிரச்னையே இல்லாமல், விநியோகஸ்தர்கள் பேசிய தொகைக்கு வாங்கிக்



• காளைமைதீன்

கொள்வார்கள். இடையில் ஏதேனும் ஒரு படம் தோல்வி அடைந்திருந்தால் முடிந்தது கதை. சில விநியோக ஏரியாக்களை விற்க முடியாமல் தடுமாறும்போது, சொன்ன நேரத்தில் எங்களால் அசலையும், வட்டியையும் அடைக்க முடியாமல் தடுமாறுகிறோம். இந்த இடத்தில் எல்லா ஃபைனான்சியர்களையும் கெட்டவர்களாகச் சித்திரிப்பது அபாண்டம். தயாரிப்பாளர் சூழ்நிலையைப் புரிந்துகொண்டு, வட்டியைக் கொஞ்சம் தள்ளுபடி செய்து தருகிறவர்களும் நிறைய பேர் இருக்கிறார்கள். தொடர்ந்து படங்கள் எடுத்து வரும் தயாரிப்பாளர் என்றால், அவரது அடுத்த படத்தின் நெகட்டிவ் உரிமையில் நிலுவைத் தொகையை மாற்றிக் கொள்வார்கள். இன்னும்



## பரிகாரம்!

"உங்களுக்கு ஆயுள்ரேகை கொஞ்சம் பலவீனமா இருக்கு..."

"இதுக்குப் பரிகாரம்...."

"பரிகாரமெல்லாம் ஒண்ணும் வேணாம். உங்க மனைவியை இனிமே சமைக்க வேணாம்னு சொல்லிடுங்க... போதும்..."

- கே. ஆனந்தன்

---

சிலர் வட்டியில் கெட்டியாக இருப்பார்கள். எப்படியாவது படம் எடுத்து முடித்தால் போதும் என்று ஃபைனான்சியர்கள் நீட்டுகிற இடங்களில் எல்லாம் கையெழுத்துப் போடுகிறோம்" என்று நொந்துபோய்ச் சொன்னவர், 'தயாரிப்பாளர்களுக்கு லாபம் எத்தனை முக்கியமோ, அத்தனை முக்கியம் ஹீரோக்களின் மனிதாபிமானம்' என்றார்.

"இன்றைக்குப் படத்தின் பட்ஜெட்டில் கணிசமான பங்கு ஹீரோவின் சம்பளம் என்பதால், ஹீரோக்கள்தான் தயாரிப்பாளர்களை காப்பாற்ற வேண்டும்" என்கிறார் தயாரிப்பாளர் கலைப்புலி எஸ்.தாணு.

"ஹீரோக்களின் சம்பள விஷயத்தில் ஆந்திரா, கேரளா இரண்டு மாநிலங்களையும் தமிழகம் பின்பற்றினாலே தயாரிப்பாளர்கள் தற்கொலை வரை போக வேண்டிய அவசியமிருக்காது. இந்த இரண்டு மாநிலங்களிலும் ஹீரோவின் மொத்த சம்பளத்தில் பத்து சதவிகிதம் மட்டுமே அட்வான்ஸாகக் கொடுக்கிறார்கள். அடுத்து முதல்கட்டப் படப்பிடிப்பின்போது இருபது சதவிகிதம். இரண்டாவது கட்ட படப்பிடிப் பின்போது இருபது சதவிகிதம். பிறகு டப்பிங் தொடங்கும்போது இருபதும், பட வெளியீட்டின்போது முப்பதும் கொடுக்கிறார்கள். இந்த நடைமுறையைப் பின்பற்றினாலே தமிழ் சினிமா சொர்க்கபுரியாகும்.

இங்கே ரஜினி, விஜய், சூர்யா, விக்ரம் உட்பட சில நடிகர்கள் மட்டும்தான் இந்த நடைமுறையில் ஊதியத்தை வாங்கிக் கொண்டு ஒத்துழைப்பு தருகிறார்கள்"

என்றவரிடம் 'கமலை விட்டுவிட்டீர்களே' என்றோம். "வெந்த புண்ணில் ஏன் வேல் பாய்ச்சுகிறீர்கள். ஆளவந்தான் படத்தை அதிக விலைக்கு விற்றேன் என்றார். அதிக விலைக்கு விற்றிருந்தால் ஏன் நான் கஷ்டப்பட வேண்டும். அவர் காஜாமைதீனை யாவது காப்பாற்றட்டும்" என்றவரிடம், அஜீத் மீது காஜாமைதீன் நேரடியாகக் குற்றம் சாட்டியிருப்பது பற்றிக் கேட்டோம்.

"அஜீத் தன்னை வைத்துப் படமெடுத்த சக்ரவர்த்திக்கு காசு வாங்காமல்தான் 'காட்ஃபாதர்' படத்தில் நடித்துக் கொடுக்கிறார். அந்தத் தயாரிப்பாளருக்கு மேலும் பிரச்னை என்றதும் அவரது இரண்டு கோடி ரூபாய் கடனை ஏற்றிருக்கிறார். அவர் மனிதாபிமானமுள்ள நடிகர்" என்றார்.

உண்மை எப்படியிருந்தாலும் "இங்கே பல ஃபைனான்சியர்கள், மூன்று அல்லது நான்கு வட்டிக்குத்தான் பணத்தைக் கொடுக்கிறார்கள். அதிலும் ஆறுமாத வட்டியை மொத்தமாகப் பிடித்துக் கொண்டே கொடுக்கிறார்கள். அசல், வட்டி இரண்டுக்கும் படத்தின் நெகட்டில் உரிமையை 'லேப் லெட்டராக' வாங்கி வைத்துக்கொண்டு படத்தின் வெளியீட்டில் முட்டுக்கட்டையாக இருப்பதில் அலாதியான சேடிஸ்ட் சுகம் காண்கிறார்கள். இன்னும் உச்சமாகப் போய் பல ஏரியாக்களின் விநியோக உரிமையைக்கூட பினாமிகளின் பெயருக்கு முடக்கிவிடுகிறார்கள்" என்றார் நாம் சந்தித்த, முகம் காட்ட விரும்பாத முன்னணித் தயாரிப்பாளர் ஒருவர்.

எது எப்படியோ, நமது கவலையெல்லாம் நடிகைகளின் தற்கொலைப் பட்டியல் போல் தயாரிப்பாளர்கள் பட்டியலொன்று உண்டாகக் கூடாதென்பதுதான்.

- நமது நிருபர்



# இளம் கல்கி

நீல் ஆம்ஸ்ட்ராங் தெரியும். லான்ஸ் ஆம்ஸ்ட்ராங்கைத் தெரியுமா? முன்னவர் நிலவுக் காதலன் என்றால், பின்னவர் சைக்கிள் காதலன். ஆம்... சைக்கிள்களும் இவரைக் காதலிக்கின்றன. எப்படி நம்புவது என்கிறீர்களா? 'Tour De France' என்ற பிரான்சில் நடக்கும் சர்வதேச சைக்கிள் பந்தயத்தில் ஏழு முறை சாம்பியன், இருமுறை ஒலிம்பிக் சாம்பியன்.

## பெடல்களின் காதலர்!

என்ன, இப்போது ஓ.கேவா!

அமெரிக்காவின் டெக்ஸாஸ் மாநிலத்தைச் சேர்ந்த ஆம்ஸ்ட்ராங், தமது 13 வயதிலேயே தன் வெற்றிக் கணக்கைத் துவக்கி விட்டார், டிரையத்லான் வீரராக! 16 வயதில், தேர்ச்சி பெற்ற டிரையத்லான் வீரராக உருவெடுத்தார்! அதன் பின் சைக்கிளிங்கில் மட்டும் தம் கவனத்தைச் செலுத்திய இவர், 1989ல் மாஸ்கோவில் நடந்த உலக ஜூனியர் சைக்கிள் பந்தயத்தில் கலந்து கொண்டார். 1991ல் 'யு.எஸ். நேஷனல் அமெச்சூர்' சாம்பியன் ஆனார்.

அப்புறமென்ன, தமிழ் சினி

இருபத்திரண்டு வயதாகும் சமியா சுல்தானா, இன்று சென்னை கல்லூரிப் பெண்களிடையே மிகப் பிரபலம்.

ஆபத்து நேரங்களில் பெண்கள் எதிராளியிடம் இருந்து தங்களைக் காப்பாற்றிக் கொள்ள 'பெப்பர் ஸ்பிரே' என்கிற மிளகின் காரத் தன்மை கொண்ட பவுடரை, சென்னை மாநகர போலீஸ் சமீபத்தில் புதிதாக அறிமுகப்படுத்தியுள்ளது. இதனை இயக்கும் விதத்தை சென்னை கல்லூரி மாணவிகளுக்கு சுல்தானா தான் கற்றுத் தந்து வருகிறார். சிறப்புக் காவல் அதிரடிப் படையில் பணியாற்றி வரும் இவரைச் சந்தித்தோம்.



"நான் ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த முஸ்லிம் பெண். ஸ்கூல் லெவல்ல கபடி போட்டியில ஜெயிச்சதைப் பார்த்து தோழிகள் ஊக்கப்படுத்தினாங்க. கூடவே பெற்றோர் கொடுத்த சுதந்திரமும்தான் இன்னைக்கு நான் உங்க முன்னாடி நிக்கறதுக்குக் காரணம்" என்று தன்னைப் பற்றிச் சுருக்கமாக முடித்துக் கொண்டவர், மெயின் மேட்டருக்குத் தாவினார்.

"இன்னைக்கு ஈவ் டீசிங் அதிகமாயிட்டிருக்கு. குறிப்பாக, பஸ்ஸுல பெண்களுக்கு ஏற்படற தொல்லைகளுக்கு அளவே இல்லாமப் போச்சு. இதைத் தடுக்கத்தான் இந்த பெப்பர் ஸ்பிரேவை அறி



மாவில் வருவது போல் கற்பனை செய்து கொள்ளுங்கள்... ஆம்ஸ்ட்ராங் சைக்கிளின் வேகம் கூடியது... முதலிடத்தை அடைய முடியாத சில தோல்விகள்... பலத்த முயற்சி... கடும் உழைப்பு... பின் உலக சாம்பியன்... ஒலிம்பிக் கோல்ட் மெடலிஸ்ட்... முதலிடத்தை தொடர்ந்து முத்தமிட ஆரம்பித்தார்.

'ஒரு விளையாட்டு வீரர் வாழ்க்கையில் இதெல்லாம் சகஜமப்பா' என்கிறீர்களா... ஒரு நிமிடம், 1996ல் உடல்நலம் சரியில்லாமல் போனது இவருக்கு! மருத்துவ அறிக்கை மௌனமாகக் கூறியது: 'ஆம்ஸ்ட்ராங்கின் நுரையீரலில், மூளையில் புற்றுநோய் செல்கள் முற்றிய நிலையில் உள்ளன.'

ஆம்ஸ்ட்ராங் அதிர்ச்சியடையவில்லை. கேன்சர் இருந்தால் என்ன... 'I Can...' என சிகிச்சைகளின் உதவியோடும், நம்பிக்கையின் பேருதவியோடும் மேலும் வெற்றிகளைக் குவிக்க ஆரம்பித்தார். 2005 வரை சைக்கிளிங் சாம்பியன் அவர்தான். இரு குழந்தைகளின் தந்தையான ஆம்ஸ்ட்ராங், தற்போது ஓய்வு பெறுவதாக அறிவித்துள்ளார்.

கேன்சர் ஃபவுண்டேஷன் ஒன்றை நிறுவி, அதன் மூலம் பல நோயாளிகளுக்கு உதவி வரும் ஆம்ஸ்ட்ராங்குக்குப் பிடித்த வாசகம்: 'பந்தயத்தில் ஜெயிக்க மட்டும் பிறந்தவன்!'

- முகில்

# இனி இல்லை ஈவ் டீசிங்!

முகப் படுத்தியிருக்கோம். கல்லூரிகளில் மட்டுமே இது கிடைக்கும்" என்ற கல்தானா, பஸ்ஸில் இம்சை கொடுக்கும் சபலிஸ்டுகளை சமாளிக்க, கராத்தே பயிற்சியையும் மாணவிகளுக்குக் கற்றுத் தந்திருக்கிறார்.

"இன்றைய சூழல்ல ஏதாவதொரு மார்ஷியல் ஆர்ட் கத்துக்கிறது ரொம்ப அவசியம். போன வருஷம் பயிற்சியின் போது, நாலாவது மாடியிலிருந்து தரையில விழுந்தேன். பலத்த அடி. ஆறு மாசம் படுத்த படுக்கையாத்தான் கிடந்தேன். அந்தச் சமயத்துல எனக்கு தைரியம் கொடுத்து, எழ வைச்சது கராத்தே கலைதான். யாராவது உங்ககிட்ட வம்பு பண்ணினா, நீங்க பார்க்குற பார்வையிலேயே சபலிஸ்டுகள் மிரளணும். இதெல்லாம் கராத்தே கத்துக்கிட்டா தன்னால வந்துடும். பாட்டு, டான்ஸ் மாதிரி இன்றைய பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை கராத்தே கத்துக்கவும் அனுப்பணும்.

ஈவ் டீசிங்கால அவதிப்படற பெண்களைக் காப்பாற்றி, அக்கிரமம் செய்யற குற்றவாளிகளை படிப்படியா இனி ஒழிச்சுக் கட்டப் போறோம்" என்று சவால் விட்டுப் பேசினார்.

வம்பு பண்ணும் ஆண்களே உஷார்!

- செந்தில்



# இளமை கல்கி

**நா**ன்கு கண்கள், இரண்டு தாடைகள், நெற்றியில் ஒரு நாக்கு, இடது கை ஓரம் முழம் நீளத்திற்கு சைக்கிள் செயின், கழண்டு போன ஒரு கார்ச் சக்கரம்... எல்லாவற்றையும் ஒரு கேன்வாஸில் கொட்டிவிட்டு "இது அப்ஸ்ட்ராக்ட் ஆர்ட்டாக்கும்!" என்று சொல்லி தைரியமாக மாட்டி வைத்துவிடுகிறார்கள். இல்லையென்றால், மிச்சம் மீதிப் பெயிண்ட்டை தண்ணீர் விட்டுக் கழுவி மிக்ஸியில் போட்டு எடுத்து, ஆங்காங்கே தெளித்துவிட்டு, ஓர் ஓவியக் கண்காட்சியைத் தொடங்கிவிடுகிறார்கள். இது போதாதென்று, ஒவ்வொரு 'படைப்பிற்கும்' லத்தீன் அமெரிக்க மொழியில், லத்தீன் அமெரிக்கர்கள் கூட புரிந்து கொள்ள முடியாதபடி ஒரு தலைப்பையும் வைத்து விடுகிறார்கள்.

## பிளாஸ்டிக்

நல்ல வேளையாக, அம்பாஸடர் பல்லவாவில் சென்ற வாரம் நடைபெற்ற இளங்கோவின் ஓவியக் கண்காட்சி, நிஜ ஓவியங்களின் கண்காட்சியாகவே அமைந்திருந்தது. எல்லாமே ஒரு நிமிட நிகழ்வுதான். தன்னை மறந்து கண்ணாடியைப் பார்த்து ரசிக்கும் ஒரு பெண், குதிகால் போட்டுத் தலையில் கைவைத்தபடி யோசிக்கும் ஒரு கிழவன், பிளாஸ்டிக் பக்கெட் உள்ளே உட்கார்ந்து கொண்டு, மின்னும் கண்களால் நம்மை எட்டிப் பார்க்கும் ஒரு

**ஆடித் தள்ளுபடியில் இப்பொழுது பக்கோடா முதல் பட்டுப் புடைவை வரை எல்லாமே கிடைக்கிறது... அதே போன்று இந்த ஆடித் தள்ளுபடியில் கிடைக்கும் என்று தெரிந்தால் நம்மூர் பிரபலங்கள் எதையெல்லாம் வாங்க நினைப்பார்கள்?**

**அஜீத்குமார்** : போட்டுக் கொடுக்காத புரொட்யூசர்

**விஜய்** : ஹிட்டான நான்கு தெலுங்குப்பட ரைட்ஸ்

**சிம்பு** : கன்னா பின்னா கசமுசா கதைகள்

**தனுஷ்** : இருப்பதை மக்கள் மறக்காமல் இருக்க ஒரு வெற்றிப்படம்

**ரஜினிகாந்த்** : இமயமலைக்கு அப் - அண்டு - டவுன் டிக்கெட்



# ஆஹா ஆடி!

குட்டிப் பாப்பா... இப்படி எல்லாமே ஒரு நிமிட நிகழ்வுதான். ஆனால் அதை அழகாக 'எக்ஸ்பிரஷன்ஸ்' எனும் தலைப்பில் ஓவியமாக்கியிருக்கிறார் இளங்கோ. மறுபடியும் நல்ல வேளையாக, எந்த ஓவியத்திற்கும் எந்தவொரு லத்தீன் மொழியிலும் அவர் பெயர் வைக்க வில்லை.

ஒரு சிறுமி சாய்ந்து நிற்கும் சுவரை தத்ரூபமாக வரைய, கத்தியால் கான் வாஸை சிறிது சுரண்டி எடுத்துவிட்டு, நிஜ சுவர் போலவே ஆக்கியிருக்கிறார். "மாடர்ன் ஆர்ட், அப்ஸ்ட் ராக்ட் ஆர்ட் எல்லாம் போட்டு பயமுறுத்துவீர்களா?" என்றால் ''நிச்சயமாக'' என்கிறார் புன்னகை செய்தபடி. ஆனால் உடனடியாக இல்லையாம். ''இப்போதான் ரியலிஸ்டிக் பெயிண்டிங்ல காலடி எடுத்து வைச்சிருக்கேன். இது என்னோட முதல் கண்காட்சி. மாடர்ன் ஆர்ட் ரீச் ஆகறதுக்கு இன்னும் கொஞ்சம் காலமாகலாம்'' என்கிறார்.

# பக்கெட்டில் ஒரு பாப்பா!



'அவசரமேயில்லை, பொறுமையா மாடர்ன் ஆர்ட் பக்கம் வாங்க' என்று பேசாமல் பேசியபடி விழித்துக் கொண்டிருந்தது பிளாஸ்டிக் பக்கெட்டுக்குள் இருந்த பாப்பா.

**- மருதன்**

**கமலஹாசன்** : ஆஸ்கார் விருது

**விக்ரம்:** சூப்பர் ஸ்டார் பட்டம்

**த்ரிஷா:** நல்ல பெயர்

**வாசன்** : மத்திய அமைச்சர் பதவி

**இளங்கோவன்** : கோஷ்டிக்குப் புதிய ஆட்கள்

**ஜெயலலிதா** : ரெண்டு மூணு கூட்டணிக் கட்சிகள்

**விநாயகமூர்த்தி** : ஃபேர்ஸ்ட் எய்டு பாக்ஸ்

**காஜாமைதீன்** : ஜெயிக்கிற குதிரை

**தயாநிதிமாறன்** : சோனியாவின் கொ.ப.செ. பதவி

**அன்புமணி** : பப்ளிசிட்டிக்காக நடுவதற்கு மரக்கன்றுகள்

**ஸ்டாலின்** : முதல்வர் நாற்காலி

**வைகோ:** ஒரு டி.வி. சேனல்

**தமிழக மக்கள்:** காவிரித் தண்ணீர்

**- முத்து**











• ஆசிரியர்



• பார்த்திபன்



• இளையபெருமாள்

வழக்கம்போல் இந்த ஆண்டும் ஆயிரக்கணக்கான கதைகள் வந்து குவிந்துவிட்டன. திரைப்பட இயக்குநரும் நடிகருமான பார்த்திபனும், பத்திரிகையாளரான இளையபெருமாளும் நடுவர்களாக இருந்தனர். இவர்களுடன் கல்கி ஆசிரியரும் பங்கேற்று இறுதிச் சுற்று கதைகளைப் பரிசீலித்ததில், கீழ்க்கண்ட சிறுகதைகள் பரிசுக்குரியவையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன.

**முதல் பரிசு ரூ.10,000**

## பிடிபட்டவன்

- பாரதிக்குமார், நெய்வேலி

**இரண்டாம் பரிசு ரூ.7,500**

## பட்டிக்காரன்பட்டி ரெயில்வே கேட்

- கே.சந்திரசேகரன், ஐதராபாத்

**மூன்றாம் பரிசு ரூ.5000**

## பெயரில்லாத பந்தங்கள்

- ரமா, சென்னை

**ஆறுதல் பரிசு ரூ.2000**

1. சத்திய ஜீவிதம் - சூர்யா சுரேஷ், புதுக்கோட்டை
2. வீடு - தேவவிரதன், சென்னை

முதல் பரிசு பெற்ற கதை இந்த இதழில்...

பிரசுரத்துக்குத் தேர்வான கதைகளின் பட்டியல் அடுத்த இதழில்...

பரிசு பெற்றவர்களுக்கு வாழ்த்துகள்! ஆர்வமுடன் கலந்து கொண்ட அனைவருக்கும் நன்றி!

படங்கள் : ஸ்ரீஹரி (ஆர்)

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2005-முடிவுகள்




## காக்கிச் சட்டைக் கொடுமைகள்!

**கா**வல் துறையும், ராணுவமும் காக்கிச் சீருடை அணிய வேண்டும் என நிர்ணயித்திருப்பதே ஒரு மிடுக்கைத் தருவதற்காகத்தான். வீரம், கம்பீரம், தியாகம் போன்றவற்றுக்கு அடையாளம் அந்தச் சீருடையும், தொப்பியும். ஆனால், சமீப ஆண்டுகளில் அவை வீரத்துக்குப் பதிலாக, வெறிக்குக் குறியீடாகி இருக்கின்றன!

குர்காவோன் (ஹரியானா) நகரில் ஹோண்டா ஸ்கூட்டர்ஸ் அண்ட் மோட்டார் சைக்கிள்ஸ் நிறுவன ஊழியர்களின் வேலை நிறுத்த ஊர்வலத்தை, காவல் துறையினர் கையாண்ட விதம் மன்னிக்க முடியாதது. எழுநூறு ஊழியர்கள் காயமுற்ற நிலையில், காவல்துறை தரப்பு இவ்வெண்ணிக்கையை வெறும் 65 என்கிறது!

எண்ணிக்கையைக் குறைத்துச் சொல்ல முற்படுவதும், இருபத்தைந்து போலீஸ்காரர்கள் காயமுற்றிருக்கிறார்கள் என்பதும், நடந்துவிட்ட தவறை மறைப்பதற்குத்தான்.

ஊர்வலமாக வந்து கொண்டிருந்த ஊழியர்கள், காவல் துறையினரை முதலில் தாக்கியிருக்கிறார்கள். இது நியாயமான செய்கை அல்ல. எனினும், முரட்டுத்தனமாக நடந்துகொண்ட கூட்டத்தின் பேரில் கண்ணீர்ப்புகை அல்லது தண்ணீர் பீய்ச்சல் செலுத்திக் கட்டுப்படுத்த காவல்துறை முயன்றிருக்கலாம். ஆனால், அவர்கள் ஆத்திரமடைந்து கண்மூடித்தனமாகத் தாக்கி



**கல்கி**



2005 ஆகஸ்ட் 7
பார்த்திப ஆடி 22
மலர் : 64
இதழ் : 1




யிருக்கிறார்கள். வேலை நிறுத்தம் செய்த ஊழியர்களை மட்டுமின்றி, அப்பாவிப் பொதுமக்களையும் லத்தியால் அடித்துப் போட்டிருக்கிறார்கள்.

செய்தித்தாள்களில் வெளியாகியுள்ள படங்களும், தொலைக்காட்சி செய்திப் படங்களும் காவல்துறையினர் அரக்கத்தனமாக நடந்து கொண்டதற்கு சாட்சி கூறுகின்றன.

ஹரியானாவில் மட்டுமல்ல; லண்டனிலும் காவல்துறையின் அத்துமீறல் நிகழ்ந்திருக்கிறது. தொடர் குண்டுவெடிப்பையொட்டி எழுந்த சந்தேகத்தின் அடிப்படையில், பிரேஸில் நாட்டு இளைஞன் ஒருவனைத் துரத்தித் துரத்திக் கொன்றிருக்கிறது போலீஸ். அவன் நிரபராதி என்று தெரிந்த பிறகும், தவறை நியாயப்படுத்தவே பிரிட்டிஷ் காவல்துறை முயன்றது.

"இப்போதுள்ள அசாதாரணச் சூழலில் மின்னல் வேகத்தில் முடிவெடுக்க வேண்டும்; சம்பிரதாயமான சட்டச் சடங்குகளைப் பின்பற்ற முடியாது" என்கிறார் லண்டன் போலீஸ் கமிஷனர்.

"இந்தத் தொடர் வெடிகுண்டு விவகாரத்தைப் பொறுத்தவரை, கண்டதும் சுடுகிற அதிகாரத்தைக் காவல்துறை தொடர்ந்து பயன்படுத்தும்" என்றும் கூறியிருக்கிறார்!

விஞ்ஞான முன்னேற்றம் கண்ட இன்றைய உலகில், தப்பி ஓட முயற்சி செய்பவனைக் கொல்லாமலே வீழ்த்தும் ரப்பர் தோட்டாக்கள், மயக்கமுறச் செய்யும் தோட்டாக்கள் என்று பலவித வசதிகள் இருக்கின்றன. அச்சத்தில் தப்பி ஓட முயன்ற பிரேஸில் இளைஞனின் காலில் சுட்டுக் காயப்படுத்தியும் செயலிழக்கச் செய்திருக்கலாம். ஆனால், தடுக்கி விழுந்தவனை போலீஸார் அமுக்கிப் பிடித்துக்கொண்டு, பல குண்டுகளைச் சுட்டுத் தீர்த்திருக்கின்றனர்.

லண்டன் காவல்துறை கமிஷனருக்கு இது குறித்து குற்ற உணர்வு ஏதும் இல்லை. "நிரபராதி செத்திருப்பது வருத்தத்துக்குரிய விஷயம்தான்; ஆனால் மீண்டும் இதேபோல் வேறு நிரபராதிகள் பலியாகமாட்டார்கள் என்று உறுதியளிக்க முடியாது" என்கிறார்!

இவரைப் பார்க்க, காஷ்மீர்ப் பகுதியில் உள்ள ராணுவப்படைத் தலைவர் தேவலாம்...




அப்பகுதியில், இருட்டில் இடம் பெயர்ந்த மூன்று வாலிப வயதினரை, பயங்கரவாதிகள் என்று சந்தேகித்துச் சுட்டுக் கொன்றதற்காக, முழுமனத்தோடு மன்னிப்புக் கேட்டிருக் கிறார். "நடக்கக் கூடாதது நடந்து விட்டது; தாங்க முடியாத துக்கம் அழுத்துகிறது. இந்தத் தவறுக்கு மன்னிப்பே இல்லை" என்று ஒப்புக் கொண்டிருக்கிறார்.

ஒப்புக் கொண்டாலும் இக்குழந்தைகளின் உயிர் திரும்பப்போவதில்லை!

மொத்தத்தில், 'ராணுவம் - காவல்துறை என்றாலே அத்துமீறல்தான்' என்று அகராதி யைப் புதுப்பிக்கும் அளவுக்கு, இவ்வமைப்புகள் தான்தோன்றித்தனமாக வன்முறையைக் கையாள்கின்றன.

இதற்குக் காரணம் என்ன...?

காவல்துறை, ராணுவம் ஆகியவற்றுக்கான பயிற்சி, உடலோடு மனத்தையும் கடினப் படுத்தும் வகையில் அமைந்திருக்கிறது. இத்துறையினர் பணியாற்றும் சூழலும் இந்த கடினத்தன்மையை வளர்க்கிறது; மனிதாபிமானத்தையும், மெல்லுணர்வுகளையும் அழித்து விடுகிறது. இது போதாதென்று, அரசியல்வாதிகளும் அதிகார வர்க்கத்தினரும் இத்துறையினருக்கு வன்முறை உரிமத்தை உறுதி செய்கின்றனர். குண்டர்களையும் ரௌடிகளையும் வளர்த்து விட்டுவிட்டு, பின்னர் அவர்களுடைய தொல்லை தாங்காமல் என்கவுண்டரில் கொன்றுவிட அதிகாரம் அளிக்கின்றனர். சந்தனக்கடத்தல் வீரப்பன், அயோத்தியாகுப்பம் வீரமணி கதைகள் நமக்குத் தெரியும்! அரசு அல்லது ஆதிக்க வர்க்கத்தை எதிர்க்கும் மக்கள் கூட்டங்களை இரும்புக்கரம் கொண்டு ஒடுக்க, அரசே ஆணை பிறப்பிப்பது மிக சகஜமாக இருக்கிறது. பிரிட்டன், அமெரிக்கா போன்ற நாடுகள் துளியும் குற்றவுணர்வு இன்றி, பிறநாட்டு குடியிருப்புப் பகுதிகளில் ராணுவத் தாக்குதல் நடத்துகின்றன. ஈராக்கில் மட்டும் 24,000 குடிமக்கள் பலி!

'தற்காப்பில்லாதவர்களைத் தாக்குவது வீரமல்ல; கோழைத்தனம்' என்ற நமது வீரமரபின் கோட்பாடு, நம் நாட்டின் ராணுவத்துக்கும் காவல்துறைக்கும் பயிற்சியினூடே போதிக்கப்பட வேண்டும். இல்லாவிட்டால், இந்தியாவும் மனிதப் பண்பற்ற மயான பூமியா கிவிடும். ○




# பிப்ரவரி 14

இளைய தலைமுறைக்கு மிகப் பிடித்தமான தலைப்பை வைத்துவிட்டதி லேயே திருப்தியடைந்துவிட்டிருக்கிறார் இயக்குநர் ஹோசிமின். விளைவு, காதலர் களே வெறுக்குமளவுக்கு ஒரு படத்தைத் தந்திருக்கிறார்.

தமிழக கிராமத்து நாயகன் பரத்தும், அமெரிக்கப் பெண்ணான ரேணுகா மேனனும் படிப்பதற்காக பெங்களூர் கல்லூரிக்கு வருகின்றனர். வந்த இடத்தில் பரத்துக்கு ரேணுகா மீது ஒரு தலைக் காதல். இவரோ பரத்தை நண்பராக மட்டுமே பாவிக்கிறார். ஒரு கட்டத்தில் சூழல் பிடிக்காது அமெரிக்கா திரும்ப நினைக்கும் ரேணுகாவின் வாழ்வில் குறுக்கிடுகிறார் ஒரு எக்ஸ். அது வேறு யாருமல்ல, பரத்தான். முகம் காட்டாமல் 'எக்ஸ்'ஸாகவே கடிதக் காதல் செய்து, தன்னை நேசிக்காத ரேணுகாவை எக்ஸ் பக்கம் திருப்புகிறார் பரத். ஒரு குழப்படி யில் வில்லன் தான்தான் எக்ஸ் என்று ரேணுகாவை நம்ப வைக்க, உண்மை தெரிந்து பிறகு விலகும் ரேணுகா, 'எக்ஸ்' வம்பே வேண்டாம் என்று உதறி, பரத் பக்கம் திரும்புவதுதான் ஆ... வ்... கதை!

காதல் கோட்டை கால இந்தக் கதையை நிச்சயம் தமிழர்கள் மீதிருக்கும் அபார நம்பிக்கையினால் (!) மட்டுமே டைரக்டர் தேர்ந்தெடுத்திருக்க முடியும். தமிழ்நாட்டில் கல்லூரிகளே இல்லை யென்று நாயகன் பெங்களூர் வந்து படிப்பதும், கர்நாடக வகுப்பறைகளில் தமிழ் துள்ளி விளையாடுவதும் என்ன லாஜிக்கோ, புரியவில்லை. 'காதல்' மூலம் சிக்ஸர் அடித்த பரத்துக்கு இந்தப் படம் சர்வ நிச்சயமாய் சறுக்கல்தான். ரேணுகாமேனன் முகம் மனதில் பதிவதற் குள் படம் முடிந்துவிடுவது துரதிருஷ்டம். இசை பரத்வாஜாம். போஸ்டர் பார்த்துத் தான் தெரிந்துகொள்ள வேண்டியிருக் கிறது. படத்தில் உருப்படியான ஒரே விஷயம், ரத்னவேலுவின் கேமரா. இளமையான காட்சிகளை வளமையாகப் பதிவு செய்திருப்பது அசத்தல். இயக்குநர் ஹோசிமின், ஷங்கரின் சிஷ்ய ராம். பாவம், ஷங்கர்!

- ○ டிஷ்டிங்ஷன்
- ○ அபவ் ஆவரேஜ்
- ○ ஆவரேஜ்
- ● ஃபெயில்

- லஜ்ஜாவதி

### இதழ் :

இணையத்தில் மட்டுமே வந்து பலரது இதயத்தைக் கொள்ளை கொண்டிருக்கும் வார இதழ் தமிழோவியம் (tamiloviam.com).



# வலை விரித்த வைகோ!

வம்பு, ஹல்வா, கவிதை, நையாண்டி, சிறுகதை, தொடர்கள், திரையோவியம் (கவர்ச்சிப் படங்கள் நீங்கலாக) ஒரு வார இதழுக்கான எல்லாம் அடங்கியுள்ளது இதில்! "தீவிரவாதத் தடுப்பு விஷயத்தில் நம் நாட்டின் நிலையையும், அண்டை நாடு போடும் இரட்டை வேஷத்தையும் உலகெங்கும் எடுத்துச் சொல்லி நமக்கு ஆதரவு தேட வேண்டிய நேரம் இது. உலக அரங்கில் இந்தியாவின் மதிப்பு வெளிநாடுகளில் உயரத்தொடங்கியிருக்கும் இவ்வேளையில், நம் பிரதமரின் குரல் நிச்சயம் அமெரிக்கப் பாராளு மன்றத்தில் எடுபடும் என்று நம்புவோம்" என்கிறது தராசு (அட, இது தலையங்கம்!). பழைய இதழ்களையும் பெட்டகமாக வைத்துள்ளார்கள். (இந்த ஈ-வார இதழை இயக்கும் கணேஷ் சந்திரா, மீனாக்ஷி இருவரும் அமெரிக்க வாழ் தமிழர்களாம்!)

### அரசியல் :

அரசியலில் நேர்மை, பொது வாழ்வில் தூய்மை, இலட்சியத்தில் உறுதி... யாரென்று உங்களுக்குப் புரிந்திருக்குமே! வைகோவேதான். தற்போது கலைஞர் பக்கம் இருக்கும் இவர் வலைஞராகவும் மாறியுள்ளார் (mdmk.org.in). 'விழுப்பணங்குறிச்சிக்கு வந்தேன். உழுத நிலம் போல் ஆயிற்று உள்ளம். ஞாபகக் கலப்பை கடந்த காலத்தைக் கீறியது. கொள்ளிடம் ஆற்றங்கரையில் தன் மேனியில் பெட்ரோலை ஊற்றிக் கொண்டு திகுதிகுவென பனைமர உயரத்துக்கு நெருப்பு பற்றி எரிந்த போதும், ஒரு அலறல் சத்தம்கூட இன்றி உடம்பெல்லாம் கருகிய நிலையில் தஞ்சை மருத்துவமனையில் 'வைகோ அண்ணன் வந்து பார்ப்பாரா?' என்ற ஏக்கம் அணையாமலேயே மரணத்தை அணைத்துக் கொண்டானே இடி மழை உதயன்...' இப்படி உணர்ச்சிப் பிழம்பாய் வைகோவின் கடிதங்கள். இந்த வலைப் பதிவில் ஓர் அழகான பொருத்தம், முகப்புப் பக்கத்தின் சுட்டி 'தாயகம்!'

### டௌன்லோட் :

ஸ்க்ரீன் சேவர் நம்ம எல்லாருக்கும் பிடிச்ச விஷயம்! நாமளே நம்ம மனசுக்குப் பிடிச்ச புகைப்படங்களோட, இசையோட ஸ்க்ரீன் சேவரை உருவாக்கலாம். அதுக்கு மென்கருவியைத் தருகிறது www.dd2002.com. என்ன உங்க குட்டீஸ் புகைப்படங்களோட ஸ்க்ரீன் சேவரைத் தயாரிக்க ரெடியா!

- வலைஞன்

## அட!



# சமோசா!

**நா.கோகிலன்**

கடற்கரை. 'எங்கெங்கும் காணினும் கூட்டமடா' என்பதாய்த் திரும்பிய பக்கமெல்லாம் காதல் ஜோடி, புதுமணத் தம்பதி, குழந்தைகளின் குதூகலம், கபடி, கிரிக்கெட் எனக் கூட்டம்.

நானும், விமலும் நடந்தோம் அண்ணா சமாதி நோக்கி.

"மாப்பிள்ளை, இப்பவெல்லாம் கடலுக்கு வரவே பயமா இருக்குடா. எல்லாம் இந்த பாழாப் போன சுனாமியாலத் தாண்டா."

. விமல் சொல்ல, நான் எதுவும் பேசவில்லை. சிரிப்பை மட்டுமே பதில் போல உதிர்த்தேன்.

"விமல், ஏதாவது சாப்பிடலாமா...? சமோசா?" கேட்டேன்.

"சரி" என்றான்.

மூன்று பேர் சமோசா கூடையுடன் உட்கார்ந்து கொண்டு இருந்தார்கள். ஒரு சிறு பெண், வயதான கிழவி, ஒரு நடுத்தர வயதுப் பெண். அந்த மூன்று பேருக்கான இடைவெளி நிறையவே இருந்தது.

நான் அந்தக் கிழவிடம் வாங்கப் போனேன். விமல் தடுத்து "மாப்பிள்ளை அங்க வேணாம்" என்று கையைப் பிடித்தான்.

ஒன்றும் புரியாமல் சிறு பெண்ணிடம் போனேன்.

"அங்கேயும் வேணாம்டா" என்று நடுத்தர வயதுப் பெண்ணிடம் வாங்கச் சொன்னான்.

"டேய், அந்தக் கிழவிகிட்ட வாங்கலாம்னு சொன்னா வேணாம்ன. பாத்தா பாவமா இருக்குடா. பசங்க சோறு போட வேண்டிய வயசுல, அது சம்பாரிச்சு வாழ்ந்துட்டு இருக்கு. சரி, படிக்கற வயசுல இருக்கற சின்னப் பொண்ணுகிட்டயாவது வாங்கலாம்னு சொன்னா, அவகிட்டயும் வேணாம்னு சொல்ற?" குழம்பிப் போய் கேட்டேன்.



"இது, இதுதாண்டா அவங்களுக்கு ப்ளஸ். வயசான கிழவியாச்சே, படிக்கற வயசுப் பொண்ணாச்சேங்கற காரணத்துக்காகத்தானே அவங்ககிட்ட வாங்கப் போற? உன்னை மாதிரி எத்தனை பேர் அப்படிப் போயிருப்பாங்க. ஆனா அந்தப் பொம்பளைகிட்ட பார்த்தியா, நாம வந்த பத்து நிமிஷத்துல யாருமே அவங்ககிட்ட வாங்கல. ஆனா, இவங்க ரெண்டு பேருகிட்டயும் நெறையப் பேர் வாங்கிட்டுப் போயிட்டாங்க'' என்றான்.

நான் நடுத்தர வயதுப் பெண்ணிடம் சென்றேன்.

''அண்ணே, நீங்கதான் முதல் போணி'' என்று கும்பிட்டாள். ●

# SRI LAXMI MUTHU MAALIGAI

## அதிரடி ஆடி விற்பனை!

**Upto 35% Discount!**
**Limited Offer**
**Hurry!!**





## Buy Rs.999/- and above
## Get 1 set of ½ gm Gold Forming Chain **FREE**

---

பல ரகங்களில் முத்து, பவளம் அமெரிக்கன் டைமண்ட் நவரத்தின மற்றும் ஜெயப்பூர் மாலைகள் ஸ்படிக மாலைகள்

**Polki, Kundan, 1 gm & 2 gm Gold Forming Jewellery**

**All Credit Cards Purchasers will Get Extra Surprise Gift**

## LMM LAXMI MUTHU MAALIGAI

Shop No.8, 9, Ground Floor,
Kasi Arcade,
No.116, Thiyagaraya Road, T.Nagar,
Chennai - 17.
Ph : 28150856 / 28155650

Also at : Sri Sakthi Plaza,
Shop No.1 Basement No.70,
Pondy Bazzar, Next to Maya's Plaza
T.Nagar, Chennai - 17
Ph : 28153383 / 28153393

இதே போன்ற பெயர் உள்ள வேறு கடைகளுக்கு சென்று ஏமாற வேண்டாம். எங்கள் ஆதரவு உங்களுக்கு எப்போதும் உண்டு.

யார் இந்த சூர்யா?

பர்சனல் டைரி 12

# நெருங்க வைத்த





• செந்திலுடன் எங்கள் தோள் மீது கைபோடும் மொட்டை மாடி தென்னை.

மனிதர்களின் கண்டுபிடிப்புகளில் மகத்தானது எது? 'மொழி' என்றார் அப்பா. 'நட்பு' என்றேன் நான். அவரிடம் விவாதித்து வெற்றி பெறுவது அத்தனை சுலபமல்ல. தாய்ப்பாலுக்குப் பிறகு, ஒரு மனிதனுக்கு நெருக்கமானது நட்புதானே? இரண்டு மூன்று வயதில் தளிர்நடை பயிலும்போதே, எதிர்வீட்டிலோ, பக்கத்து வீட்டிலோ, ஒரு சிநேகிதனோ, சிநேகிதியோ கிடைத்து விடுவார்கள். காதலி, மனைவியெல்லாம் இருபது, முப்பது வயதுக்கு பிறகுதானே கிடைப்பார்கள். பல சமயங்களில், அம்மா, அப்பாவிடம் பகிர்ந்துகொள்ள முடியாத விஷயங்களை நண்பனின் தோளில் இறக்கி வைக்கலாம்.

ஒரு நல்ல நட்பை எப்படி எடை போட்டு அறிவது? அப்பாவின் அளவு கோல் இதுதான். "நண்பனே ஒரு கட்டத்தில் சகோதரனாகத் தெரிவான். இந்த அடுத்த கட்ட பரிமாணத்தை எட்டுவது தான் அற்புதமான நட்பு. அப்பாவே கண் முன்னால் இதற்கு உதாரணம். மாதம்பட்டி சிவகுமார் அய்யாவுக்கும், அப்பாவுக்குமான நட்பில், நான் இராமனையும் பரதனையும் தரிசித்திருக்கிறேன்.

மாதம்பட்டி சிவகுமார் ஒரு ஜமீன்தார். அவரின் எளிமையைப் பார்க்கிற யாரும் அதை ஒப்புக்கொள்ள மறுப்பார்கள். "ஜமீன்தார்கள் என்றால் இருள் சூழ்ந்த பிறகு, துப்பாக்கியேந்தி காட்டுக்குப் புறப்படுவார்கள். வேட்டை நாய் பரிவாரங்களோடு ஜீப்பில் போய், மான், புலி, காட்டெருமைகளை விடிய விடிய வேட்டையாடுவார்கள். வேட்டையாடிய புலியின் உடலைத் தரையில் கிடத்தி, அதன்மேல் ஒற்றைக் காலை வைத்து, ஒரு கையில் துப்பாக்கியைப் பிடித்தபடி போட்டோவுக்கு போஸ் கொடுப்பார்கள். பகலில் மான் கறி பிரியாணி, வறுவல் என்று வயிறுமுட்டச் சாப்பிட்டு, மாலை வரை தூக்கம். எழுந்ததும் சீட்டாட்டம். 1950 வரையிலும் இதுதான் அவர்கள் வாழ்க்கை. இதை உதறியெறிந்துவிட்டு, உழைப்பால் உயர்ந்த மனிதர்களைத் தேடி கீழிறங்கி வந்தவர் மாதம்பட்டி சிவகுமார்" என்று அவரைப் பற்றி அப்பா அடிக்கடி பேசுவார்.

ஒவ்வொரு கிறிஸ்துமஸ் விடுமுறையிலும், சில தினங்களை மாதம்பட்டியில் செலவிடுவோம். இப்போதும் பிரமிப்பாகவே இருக்கிறது. ஒரு ஏக்கர் பரப்பளவில் பிரும்மாண்டமாய் கட்டப்பட்ட அரண்மனை வீடு. திரும்புகிற பக்கமெல்லாம் ஜன்னல்கள். வீடு நிறைய இறைந்து கிடக்கும் வெளிச்சத்தைப் போலவே, பளீரென்று பிரகாசமாக இருக்கும் அவரது பேச்சும், முகமும். தீபாவளியை ஊர் மக்களோடு சேர்ந்து கொண்டாடும் அவர்களின் பெருந்தன்மையை இப்போது நினைத்தால் ஆச்சர்யமாக இருக்கிறது. மாயாவி படத்தில் எனது தோழனாக நடித்த சத்யன், மாதம்பட்டி சிவகுமார் - தாரா தம்பதி

# நட்பு!





• லண்டன் பயணத்தின் போது ராஜாவுடன்...

யின் ஒரே வாரிசு. பத்து வயதுச் சிறுவர்களாக, நான், தம்பி, சத்யன் மூவரும் மாதம்பட்டி அரண்மனையில் ஓடிப்பிடித்து விளையாடி இருக்கிறோம். காலார நடந்து போய், நொய்யல் ஆற்றில் தூண்டில் போட்டு மீன் பிடித்திருக்கிறோம். மாதம்பட்டி அய்யா பற்றி பேச்சு வரும்போதெல்லாம், 'அன்னக்கிளி' படப்பிடிப்பில் நடந்த ஒரு சம்பவத்தை, நெகிழ்ச்சியோடு நினைவு கூர்ந்து சொல்லுவார் அப்பா.

"பவானி அணையையொட்டி 24 கி.மீ. வனப் பகுதிக்குள் இருக்கும் தெங்குமரஹாடா கிராமத்தில் படப்பிடிப்பு நடத்தினோம். தினமும் ஒரேயொரு முறை பஸ் வந்து போகும் ரிமோட் ஏரியா. துணை நடிகர்கள் உட்பட எங்கள் படக் குழுவில் மொத்தம் நூற்று ஐம்பது பேர். நான் கோவைக்கு படப்பிடிப்புக்காக

வந்திருக்கிறேன் என்ற தகவலும் அவருக்குக் கொடுக்கவில்லை. திடீரென்று ஒரு நாள் மதியம் பன்னிரண்டு மணிக்கு இரண்டு ஜீப்புகள் நிறைய பெரிய பெரிய அண்டாக்களில் மட்டன் பிரியாணி, சிக்கன் வறுவல், மீன் குழம்பு, கோளா உருண்டை என்று கொண்டு வந்து, மொத்த யூனிட்டுக்கும் விருந்து கொடுத்து மிரட்டி விட்டார். இத்தனை வகை உணவுகளைத் தயார் செய்ய எத்தனை அதிகாலையில் எழுந்து ஏற்பாடுகள் செய்திருக்க வேண்டும்!"

அப்பா வியப்பது போலவே எனது நண்பர்களும் என்னை வியக்க வைத்திருக்கிறார்கள். எங்கள் தெருவிலேயே எனது முதல் நண்பனைக் கண்டுபிடித்தேன். ராஜசேகர்! ராஜா என்றுதான் கூப்பிடுவேன். கற்பூர சுந்தரபாண்டியன் ஐ.ஏ.எஸ் என்ற பெயர்ப் பலகை மின்னும் எதிர்வீட்டின் சின்னஞ் சிறுவன். அப்பா ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி எனும் பந்தா எதுவும் அவர் பேச்சில் இருக்காது. பள்ளி நாட்களில் தெருவில் சைக்கிள் மிதித்துக் கொண்டிருக்கும்போது, அவரும் சைக்கிளில் எதிரே வந்தார். அப்போதுதான் முதல் ஹாய்! எங்கள் இருவரது முகச்சாயலும் நிறைய ஒத்துப்போகும். புதிதாக யார் வீட்டுக்குப் போனாலும் எங்களைப் பார்த்து அண்ணன், தம்பியா? என்று கேட்பார்கள். ராஜா 'ஆமாம்' என்று ஆச்சர்யமூட்டுவார்! ராஜா என்னை விட மூன்று வயது சீனியர். ஆனால் அவரைத்தான் எல்லோரும் தம்பி என்பார்கள். எங்கள் வீட்டில் இருந்ததைவிட, நான் ராஜா வீட்டில் இருந்ததுதான் அதிகம்.

ராஜா இடது கண் என்றால், செந்தில் எனக்கு வலது கண். செந்தில் கிடைத்தது செயின்ட் பீட்ஸ் பள்ளியில். அங்கே சேர்ந்த புதிதில் எல்லோருமே எனக்கு அந்நியமாகத் தெரிந்தார்கள், செந்திலைத் தவிர. மதிய உணவை மரத்தடிகளில் உட்கார்ந்து கூட்டம் கூட்டமாகச் சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். நானும் மரத்தடியில்தான் சாப்பிடுவேன். ஆனால் தனியொரு ஆளாக! நான் சாப்பிடுவதை கவனித்த செந்தில் "ஏண்டா! என்ன ஆச்சு! எங்க கூட வந்து சாப்பிடு" என்று கூப்பிட்டார். எனது தனிமையின் தவிப்பை உணர்ந்து கூப்பிட்ட முதல் ஆள். தயக்கத்தோடு அவர்களது குழுவில் ஐக்கியமானேன்.

இன்று ராஜா ஒரு வழக்கறிஞர், செந்தில் ஒரு ஆர்க்கிடெக்ட், நான் நடிகன். வெவ்வேறு துறைகளில் வேகத்தோடு இயங்கிக் கொண்டிருந்தாலும், எங்கள் நட்பில் நிதானம் எப்போதுமே நிரம்பி வழிகிறது. சில சமயம் செந்தில் விலகி நின்று "உன் நட்பு கிடைத்தது ரொம்பப் பெருமையான விஷயம்டா!" என்பான். நான் திட்டுவேன். நாங்கள் மூவருமே தவறான பாதையை நோக்கிப் போனதே இல்லை. ஆனால் நிறைய குறும்புகள் செய்திருக்கிறோம்.

பத்தாம் வகுப்புப் படிக்கும்போது ராஜா ஒரு பெண்ணைப் பார்த்திருப்பான். அதே பெண்ணை எனக்கும் பிடிக்கும். நானும் ராஜாவும் உளவாளிகள் போல, அந்தப் பெண்ணின் வீடு எங்கே இருக்கிறதென்று போய்ப் பார்த்துவிட்டு வருவோம். ஆனால் அந்த முறையோடு அது முடிந்துவிடும். டீன்ஏஜில் எல்லோருக்கும்



• மாதம்பட்டி அரண்மனையில்...

வருகிற குறுகுறுப்பான ஈர்ப்பு. ப்ளஸ் ஒன் படிக்கிறபோது ஒருமுறை செந்திலும் நானும், சைக்கிளில் அவனது வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தோம். செந்தில் ஓட்டினான். யூனிஃபார்மில் ஒரு பெண் எங்களைப் பின் தொடர்ந்து சைக்கிளில் வந்து கொண்டிருந்தாள். குறும்பு கொப்பளிக்கும் முகம். திடீரென்று முன்னேறிச் சென்ற அந்தப் பெண், எங்கள் சைக்கிளுக்குக் குறுக்கே வந்து பிரேக் அடித்து நிறுத்த,



• மாதம்பட்டி சிவகுமார்

செந்தில் தட்டுத்தடுமாறி வண்டியை நிறுத்தினான். சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவிட்டு, புத்தகப் பையிலிருந்து ஒரு காகிதத்தை அவசர அவசரமாக எடுத்தாள். செந்தில் முகத்துக்கு நேராக அதை நீட்டி, "நாளைக்கு எனக்கு பதில் தெரியணும்" என்று அதட்டலாகச் சொல்லிவிட்டு, சிட்டாகப் பறந்து போனாள். செந்தில் நடுங்கிப் போய் நின்றிருந்தான். காகிதத்தை வாங்கிப் பிரித்தேன்.

'மை டியர் ட்ரீம்பாய்...' என்று ஆரம்பித்தது கடிதம். அவள் கெமிஸ்ட்ரி மாணவியாக இருக்க வேண்டும். ஆக்ஸிஜன், நைட்ரஜன்... என்று ஒப்பீடு தூள் பறந்தது. நான் கடிதத்தை படிக்கப் படிக்க செந்திலுக்குள் எந்த ரசாயன மாற்றமும் இல்லை. மாறாக உடல் நடுங்கியது... "சரவணா, இந்தப் பொண்ணு யாருன்னே எனக்குத் தெரியாது!" என்று குரலெடுத்து அழ ஆரம்பித்து விட்டான். அடுத்த மூன்று நாட்கள் செந்தில்



... நான், தம்பி, சத்யன்.

பள்ளிக்கு வரவில்லை. வீட்டுக்கு ஓடினால் காய்ச்சலில் படுத்திருந்தான். 'நமக்குப் போய் ஒரு பெண் லவ் லெட்டர் கொடுத்து விட்டாளே' என்பதை அவனால் ஜீரணிக்க முடியவில்லை. நானும் ராஜாவும் விழுந்து விழுந்து சிரித்திருக்கிறோம்.

என்னைக் கலங்கி அழ வைத்த நட்பும் உண்டு. ராஜா சென்னை சட்டக் கல்லூரியில் படித்தபோது அவரைப் பார்க்க அங்கே அடிக்கடி செல்வேன். கல்லூரியில் ராஜாவின் பெஸ்ட் ஃப்ரெண்ட் விஜய். நல்ல நிறம். வலுவான உடற்கட்டு. நான் சட்டக் கல்லூரிக்குப் போனால் "உங்க ஊர்க்காரன் வந்துட்டான்டா!" என்று அவரைப் பார்த்து கிண்டலடிப்பார்கள். ஊர்ப்பாசம் எங்களைப் பிணைத்து விட்டது. ஈரோடு அருகே எரப்பம்பாளையம் என்ற கிராமத்திலிருந்து வந்து படித்துக் கொண்டிருந்தார்.

அம்மாவின் கிராமத்தில் கொட்டிக் கிடந்ததைப் போலவே, அவரது கிராமத்துக்குப் போகும்போதெல்லாம் சந்தோஷத்தில் புரண்டிருக்கிறேன். பாசமான குடும்பம் அவருடையது. மூன்று சகோதரிகள். அவரது வீட்டில் எனக்கும் அவருக்கும் 'யார் அதிகம் சாப்பிடுவது' என்று பெரிய போட்டியே நடக்கும். சட்டம் படித்துவிட்டு கார்மெண்ட் உற்பத்தியில் இறங்கிய விஜய், திருமணம் ஆனவுடன் சென்னையில் வந்து செட்டிலானார். இங்கே வந்த பிறகு நான் சினிமாவிலும், அவர் பிஸினஸிலும் பயங்கர பிஸி. வீட்டு விசேஷங்களில் மட்டும் பார்த்துக்கொள்ள வேண்டிய நிலை. "சரவணா, நான் உன்னிடம் மனம் விட்டுப் பேசி நீண்ட நாள் ஆகிறது. உன்னைச் சந்திக்க வேண்டும்'' என்றார். ஆனால் திட்டமிட்ட நாளில் இருவருக்குமே முடியாமல் போய்விட்டது. ஒருமாதம் ஓடியிருக்கும். உறுத்தல் விரட்டியடித்ததில் வேலைகளைக் கொஞ்சம் ஒதுக்கிவிட்டு விஜய்யை சந்தித்து சர்ப்ரைஸ் கொடுக்கப் புறப்பட்டேன். ஆச்சர்யம்! எனது செல்போனில் "விஜய் காலிங்" என்ற டிஜிட்டல் எழுத்துக்கள் மின்னின. உற்சாகம் பொங்க "ஹலோ விஜய்!" என்றேன். ஆனால் ஒலித்தது வேறொரு குரல். செய்தியைக் கேட்டதும் உடல் நடுங்கியது. காரை மேற்கொண்டு ஓட்ட முடியவில்லை.

(டைரியைத் தொடருவேன்)

# பிடிபட்டவன்

நெய்வேலி பாரதிக்குமார்

‘அரணாக்கயிரு இல்லாம எழுவெடுத்த ட்ரவுசரு நிக்கமாட்டேங்குது’ வயித்தை ஒரு எக்கு எக்கி பட்டனில்லாத ட்ரவுசரை முடிச்சு போட்டுக் கொண்டான் மருதன். எரும மிதிச்ச கால் எரியறது மாதிரி வெய்ய மூஞ்சியில எரிச்சலக் கௌப்பியது.

குத்துக்காலிட்டுக் குந்தியபடி கிழக் கெடந்த ரவ குச்சியை எடுத்து மணல் தர மேவாட்டத்தில் ஒரு நோக்கமுமில்லாம என்னத்தையோ கிறுக்கினான். அது என்னமோவாக வடிவெடுத்தது. குச்சியை தூரப் போட்டுவிட்டு ஆட்காட்டி விரலால் அளைந்தான். மணல் தூளு விரல் சந்துல பூந்து ‘கிச்சு கிச்சு’ மூட்டுவதும் சொகமாய்த்தானிருந்து. அந்த பொதையல்ல கெடைச்ச பீடித்துண்டு, அவனுள் நெனப்பக் கௌறி நெஞ்சுக்கூட்டுக்குள் பொகைஞ்சி இருமலாகத் தெறித்தது.

இன்னிக்கு பொழப்புப் போச்சு. ‘கருப்பனை’ குளிப்பாட்டணும்னு நெனச்சிகிட்டருந்தான். அதுக்குள்ள இப்படி கூட்டி வந்துவுட்டானுங்க தொரமாருங்க. அன்னன்னிக்கி வேலய முடிச்சு கூலியக் கேட்டாலே முழுசா கெடைக்காது.

இன்னிக்கு ‘கருப்பனு’ம் சாணிப்பூச்சோடதான் கொட்டாய்க்குப் போயிருப்பான். கூட்டாளி பக்கிரிகிட்ட மாடுகளை சேத்து அனுப்பியாச்சு. பண்ணைகிட்ட கூலிய அவ்வளவு கறுவா பேத்துற முடியாது.

ஆச்சு மணி மூணு. வயித்துக்குள்ள எல்லாப் பயலும் பூந்துக்கிட்டு ‘காக்கரே பூக்கரே’ன்னு சிரிக்க எகத்தாளம் போட்டாப்பல, பசி குதியாளம் போட்டது. எப்ப நம்மளக் கூப்புட்டு, எப்ப நம்மள வுடுவாங்கன்னு தெரியலயே... காலம்பற பதினோரு மணிக்கு வீரங்கோயிலு வாசலாண்ட கெடச்ச செதறு தேங்காத் துண்ட ரவ கரண்டித் தின்னதுதான். ஒரு மடத் தண்ணி குடிச்சா நல்லாருக்கும். தொரமாருங்க

அமரர் கல்கி நினைவு சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு ரூ.10,000 பெற்ற கதை

மூஞ்சியப் பாத்தா டீக்கடைக்குப் போற அறிகுறியே இல்ல. அவங்களும் கோர்ட்டு வாசப் பக்கம் நின்னு, ஒவ்வொரு ஊரு பேரச் சொல்லி போலீசுக் காரவுங்கள கூப்பிட்டுக்கிட்டிருந்த டவாலியையே பாத்துக்கிட்டிருந்தாங்க. அந்தந்த ஊரு போலீசுக்காரவங்க ஏகத்துக்கு பாவனை காமிச்சு, இப்பிடியும் கூட இவனுங்க இருப்பாங்களான்னு அம்புட்டு பவ்யமா, கூட கூட்டியாந்த ஆளுங்கள கூண்டுல ஏத்துனதப் பாத்து மருதனுக்கு வா ஒவந்துப் போச்சு...

நெரிஞ்சி முள்ளு கணக்கா மொளஞ்சி கெடந்த தாடிய வறட்டு வறட்டுன்னு சொரிஞ்சான் மருதன். தாமரக் கொளத்துல குதிச்சு கொம்மாளம் போடற நேரம் இப்ப... இன்னேரம் ஊர்ல இருந்தா, அந்த பக்கிரியக் காட்டியும் ரெண்டு நிமிட்டாவது கூட தண்ணிக்குள்ள அமுங்கிக் கெடந்து மணிக்கடை 'பன்'ன பந்தயப் பொருளா வாங்கிப்



புடலாம்னு ராத்திரி முச்சூடும் கூர்ப்பா திட்டம் தீட்டி வச்சிருந்தான். அந்த நெனப்பே இனிப்பா இருந்துச்சு... எச்சிலக் கூட்டி முழுங்கி, 'விர்'ருன்னு கல்லெடுத்து விசிறினான் கோவமா.

கோவாலு வீட்டுக் கல்யாணத்துக்கு சாந்திரம் போய்தான் தொப்ளான் தோப்புக் கொல்லயில வாழ மரம் வெட்டி எடுத்துட்டு வர்றதா சொல்லியிருந்தான். கோவாலுவுக்கு எதிலயும் கண்ணு மண்ணு தெரியாம கோவம் வரும். எத்தன பாட்டு வுட்றானோ... அவனுக்கும் வேணும், போன தரம் வேலிக்கருவ முள்ள வெட்டியாறச் சொல்லிட்டு, எங்கியோ மூங்கிப் படலு ஓசியில கெடச்சிதில, 'என்னா முள்ளு வெட்டியாந்திருக்க எலிவாலு கணக்கா... இம்மாந்தடி வேணும்ல' அப்பிடின்னு தொடயத் தட்டிக்காட்டினான். அது ஆவற கத இல்லன்னு தெரிஞ்சும், என்ன பண்றதுன்னு பொத்திக்கிட்டுதான் போனான் மருதன்.

பதிலுக்கு இப்பிடி ஒரு அயனான சான்சு கொடைக்கும்னு எதிர்பார்க்கவே இல்ல. 'நல்லா வேணும் டா மவனே'ன்னு நாக்க மடக்கி, பொறங்கய்யத் தட்டி சொல்லணும் போல இருந்தது அவனுக்கு. ஒரு தரம் வாயாரச் சொல்லி வாசாப்பும் வுட்டான்.

'பொளி'ச்சின்னு எச்சில மறுபடி துப்பி, அதுல மணலத் தள்ளித் தள்ளி மூட அது செத்த நேரத்துக்கு பொழுது போக நல்லாத்தான் இருந்துச்சு.

''எலேய், மருதப்பா, என்ன பண்ணிக்கிட்டு கெடக்க'' அதட்டலான குரல் கேட்டு, மெரண்டு துண்ட எடுத்து கமுக்கட்டியில வச்சிக்கிட்டு ''ஒண்ணுமில்லிங்க சாமி''ன்னான்.

''தூங்கி கீங்கிப்புடாதே... அய்யா எப்ப வேணுமுன்னாலும் கூப்புடுவாங்க. மத்தண்ணியெல்லாம் இப்பம் கெடயாது. வெளங்குச்சா?'' கூட்டி வந்த போலீசுக்காரரு இன்னும் மெரட்டலா.

''சரிங்க எசமானே'' சொல்லிட்டு திரும்பியும் குந்தி உக்காந்தான். கால் பூரா சில்லுன்னு என்னமோ ஒண்ணு ஓடி ஓடியாந்த மாதிரி இருந்திச்சு.

மருதனுக்கு அவிச்ச மல்லாட்டன்னா அம்புட்டு இஷ்டம். அலமேலு கெழவி சந்தைக்குப் போயிட்டு நாலு மணி வாக்கில வரும். இன்னிக்கு கடசி திங்கக் கெழம. நிச்சயம் சந்தையில கூட்டம் இருக்காது. மொத்த மல்லாட்டயும் விக்க ஒரு நாளும் அவளுக்கு பொசுப்பே இருக்காது. எப்படியும் மிஞ்சிக் கெடக்கும். நிச்சயம் கேட்ட காசுக்குக் குடுத்துடுவா. இந்த நேரம் பாத்து இங்க வந்து மாட்டிக்கிட்டமே. எப்ப வுடுவானுங்கன்னு தெரியலயே...

அண்ணந்தம்பி ஒதவி ஒத்தாசைக்குன்னு ஒருத்தனும் இல்லாம, ஒத்தையா கெடக்கறது எம்புட்டுக் கஷ்டம்னு இந்த மாதிரி நேரத்துலதான் தோணும். மத்தபடி மருதனுக்கு பெருசா கவலயும், லட்சியமும் கெடையாது.

கீழ கெடந்த குச்சிய மறுபடி எடுத்து கடவாப் பல்லுல ஏதோ கெடக்கறா மாதிரி நெம்பி எடுத்தான். வந்தது பருக்கையா இல்ல குச்சியா தெரியல, ஏதோ சாதிச்சவன் மாதிரி மண்டய, மண்டய ஆட்டி

## பொடிக்கல் ஊளை

### குறட்டை எப்படி ஏற்படுகிறது?

தொண்டையின் பின்புறம் சில மென்மையான தசைகள் அமைந்திருக்கின்றன. உணவு விழுங்குவதற்கும், வாய் கொப்பளிப்பதற்கும், இந்தத் தசைகள்தான் காரணம். பிள்ளை பூச்சி மாதிரி அமைதியாக இருக்கும் இந்த தசைகள், சிலரது தொண்டையில் மட்டும் சதா சவுண்டு விட்டுக் கொண்டிருக்கும். சம்பந்தப்பட்டவர் உறங்கும் நிலையில் சுவாசிக்கும்பொழுது இந்தத் தசைகள் சும்மா இல்லாமல் ஒன்று சேர்ந்து துடிக்கும். அப்பொழுது சில சப்தங்கள் வெளிப்படுகின்றன. இந்த சப்தங்களைத்தான் நாம் குறட்டை என்கிறோம்.

## ஓவர் !

***''உங்க ட்ரஸ்ஸைக் கொஞ்சம் கொடுங்க, ஒரு ரவுண்டு போயிட்டு வந்துர்றேன்னு கேட்குறதெல்லாம் ஓவர் கபாலி!''***

***- என்.கோவிந்தராஜுலு***



சிரிச்சிக்கிட்டே தூ தூன்னு துப்பினான். சமய சந்தர்ப்பமில்லாம ஒத்த ஏப்பம் வந்த சுவடு தெரியாம வாயிலேர்ந்து கௌம்பிப் போனது. 'அட கெரகமே, என்னாத்தக் கண்டேன்னு இப்பிடி காஞ்ச வயித்திலேர்ந்து கௌம்பி ஓடறேன்னு' சலிப்பா தனக்குத்தானே சொல்லிக்கிட்டான். மருதனுக்கு எதுக்காகவும் எதுத்தாப்பில ஆளு, தோளு தேவையில்ல. காத்து இருந்தா போதும்னு எல்லாக் கதயும் சொல்லுவான்.

தூங்கு மூஞ்சி காத்து சொகமாத் தானிருந்தது. காசு இருந்தா ரெண்டு கேக ஆடலாம் போலத்தான் இருக்கு. அட, இந்த கோர்ட்டு கச்சேரி எல்லாத்துக்கும் எப்பிடித்தான் இப்பிடி சொகுசா எடம் கெடைக்குமோ தெரியலப்பா.

'ம்ஹெகங் ம்ஹெகங்'ன்னு கனைக்கிற குரல் கேட்டு வேலிப்பக்கம் திரும்பினான். கறுப்பும், வெள்ளயும் திட்டுத் திட்டா கலந்த நெறத்துல மாசானம் வூட்டு ஆடு மாதிரியே நின்னதப் பாத்ததுந்தான் 'ஆஹா'ன்னு மரக்காயரு நாபகம் வந்தது. ஆட்டாம் புளுக்க ரெண்டு மூட்ட பெலா மரத்து அடி வேருக்குப் போட கேட்டிருந்தது பல்பு போட்ட மாதிரி மருதனுக்கு மினுக்கிச்சி. நல்ல மனுசன், அவரு கேட்டா எப்பவும் தட்டாம செஞ்சுடுவான். அறுவது ரூபா கெடைக்குந்தான். இன்னும் அரை மூட்ட பொறுக்குனா, ரெண்டு மூட்ட தேறிடும். பழம் பெருத்து அறுத்தா வஞ்சனையில்லாம பத்து சொளயாச்சும் குடுப்பாரு. அந்த மரம் ஒரு ஒத்தக் காச்சி மரம். ஒரு தாட்டிக்கு ஒரு காய்தான் காய்க்கும். ஆனாலும் அம்புட்டு ருசியா இருக்கும். ஒனக்கு, எனக்குன்னு அதுக்கு மரக்காயரு சொந்தத்திலேயே ஏகப்போட்டி.

அப்பிடியும் போன தட மருதப்பன் கேட்டேபுட்டான். "ஏன் பாயி, எனக்கு ஒரு தரம் முழுப் பழமா குடேன்... தேனாட்டம் இனிக்குது."

"இன்ஷா அல்லா, அடுத்த முறை பாப்பம்.''

''அது என்ன பாய் எதக் கேட்டாலும், என்னுமோ அல்லாங்கற எப்ப பாத்தாலும்.''

''அல்லாவோட கருணையால நான் உசிரோட இருந்து, நீயும் நல்லபடியா இருந்து, என் மரமும் 'பிலு பிலு'ன்னு காச்சா, ஒனக்கும் ஒன்னு தாரேன்னு அர்த்தம்.''

''அடேங்கப்பா, அம்முட்டோண்டு வார்த்தைக்கு இம்மாம் பெரிய அர்த்தமா? களுவாத்தான் இருக்கு பாய், ஒன் பாசை.''

ஆட்டாம்புளுக்கய இந்தத் தட கொஞ்சம் கூடக் குடுத்தா, தகிரியமா இன்னும் பத்து சொள சேத்துக் குடுன்னு கேக்கலாம். ''என்னுமோ அல்லா நிறையக் காய்க்கணும்''ன்னு கன்னத்தில் போட்டுக்கிட்டான். பாய் மாதிரி சொல்ல வரலேன்னாலும், ஒரு மாதிரியா தேத்தி சொல்லிப்புட்டோம்னு சந்தோசப்பட்டுக்கிட்டான்.

எப்ப கூப்புடுவாங்கன்னு தெரியல கெரவம், இன்னிக்குப் பாத்து தங்கச்சி மேட்டுல மேச்சலுக்கு வந்தது தப்பு. கொடுக்காப்புளிக்கா கெடைக்கும்னு அந்த பக்கிரியப்பய பேச்சக் கேட்டுக்

கிட்டு வந்ததுதான் குத்தம். கடசியில அந்தப்பய எங்கியோ ஓடி பதுங்கிக்கிட்டான். தொரைமாருங்களும் 'ஓடன பயல வுடு' அப்படின்னு அத லேசுல வுட்டதுதான் மருதனுக்கு ஆச்சர்யமாப் போச்சு. அட, இது தெரிஞ்சிருந்தா, மாடு போனா மசிரே ஒண்ணாச்சுன்னு எங்கனா ஓடி பதுங்கியிருக்கலாம், இப்பிடி வந்து மாட்டிகிட்டமேன்னு ஒரே வெசனமாப் போச்சு மருதனுக்கு.

மேக்க சூரியன் நிக்கறதைப் பாத்தா மணி நாலாயிருக்கும். அலமேலுக் கெழவி இன்னேரம் போயிருக்கும். அவளுக்குத்தான் இருட்டுனா கண்ணு புரியாது, சாயறதுக்குள்ள வூட்டுக்குள்ள அடைஞ்சிடணும். அவிச்ச கல்ல போச்சு. எவனுக்கு அடிச்சதோ லாட்டரி. மொத்தமா வாரிக் குடுத்துருப்பா. நாம்பளும் இல்லன்னா போட்டிக்கு ஆளு இல்லாம, இன்னும் அம்பது காசு கொறச்சே குடுத்துருப்பா. எந்தப் பயலுக்கு மச்சம் இருந்துச்சோ தெரியல. வெள்ளோட்டந்தான்னு நெனச்சிக்கிட்டு சுத்தும் முத்தும் ஒரு தரம் பாத்தான். அவனவனுங்க பொண்டாட்டி, புள்ளங்களோட வந்து கெடக்கறதப் பாத்தா, ஏக்கமாத்தான் இருக்கு. வூட்டுக்காரனுக்கு டீயும், பொறையும் வாங்கி வந்து கூடயே கெடக்கறாளுவ. நமக்குத்தான் அந்த அம்சமே இல்லயே. எருமசாணத்தோடயும், ஆட்டாம் புளுக்கையோடயுந்தான் சகவாசம்னு ஆயிப் போச்சு. அப்புறம் ஏக்கப்பட்டும், துக்கப்பட்டும் ஆவப்போறதென்ன...?

''இருப்புக்குறிச்சி போலீஸ் ஸ்டேஷன்... இருப்புக்குறிச்சி போலீஸ் ஸ்டேஷன்...'' வெளியே நின்றிருந்த டவாலி கத்தினான்.

அவ்வளவுதான், மருதப்பனைக் கூட்டி வந்த போலீஸ்காரர்கள் இருவரும், அவன் தோள் மீது கை வைத்து நெட்டியபடி, கோர்ட்டுக்குள் நுழைந்து கூண்டில் நிற்க வைத்தனர்.

நீதிபதி இவனை நிமிர்ந்து பார்த்து கேட்டார். "உன் பேர் என்ன?"

"கும்பிடறேனுங்க, மருதப்பன் சாமி."

''என்ன வேலை பாக்குற?''

''ஆடு, மாடு மேய்க்கிறேனுங்க'' சொல்லிவிட்டு 'சரியா சொல்லிட்டனா' என்பது போல கூட்டி வந்த போலீஸ்காரர்களைப் பார்த்தான்.

''உன்னைப் பயங்கரவாத தடை தடுப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்திருக்கிறார்கள் என்பது உனக்குத் தெரியுமா?''

கேட்பதற்கும், புரிவதற்கும் சிரமப்பட்ட மருதப்பன், ஒரு கணம் திடுக்கிட்டுப் பின் சொன்னான், ''புரியலீங்க எசமானே.''

நீதிபதி ஒரு முறை கண்ணாடியைக் கழற்றி நிமிர்ந்து பார்த்து மறுபடி தலைகுனிந்து பின் கேட்டார், "போலீசாரால் தேடப்படும் தலைமறைவுக் குற்றவாளிகளுடன் சேர்ந்து தேச விரோதச் செயல், பிளவுபடுத்துதல், கூட்டுச் சதி செய்து அரசுக்கு எதிராக நடத்தல் ஆகிய ஜாமீனில் விட முடியாத குற்றங்கள் உன் மீது சுமத்தப்பட்டிருக்கிறது. நீ இவற்றை ஒப்புக் கொள்கிறாயா...?" ○



# 3 புத்தகங்கள்



## வரலக்ஷ்மி பூஜை செய்வது எப்படி?

## அம்மன் அலங்காரம்

# திருமகளே வருக வருக!

ஸ்பெஷல் கையேடு



## அழகுக்கலை நிபுணர் வசுந்தரா தரும்

# அழகு யோசனைகள்

என்றும் உங்களுடன் ஆகஸ்ட் 2005

# மங்கையர் மலர்



''எதிரி நாட்டு மன்னனிடம் நம் மன்னர் சரணடைஞ்சுட்டாராமே?''

''ஆமாம்... மகாராணியாரிடம் மாட்டிக் கொண்டு முழிப்பதைவிட இது தேவலையாம்!''

- ராம் ஆதிநாராயணன்



# இளக் இளரா

''என் மருமகப் பொண்ணு ரொம்ப கர்நாடகம்!''

''அவ்வளவு வெகுளியா?''

''நீ வேற, தவிச்ச வாய்க்கு தண்ணி கூடத் தரமாட்டேங்கறா!''

- ஆர்.கே.ராமு

''நமது மன்னர் முன்னே ரௌடியாக இருந்திருப்பார் போலிருக்கு.''

''எதை வெச்சு சொல்லுகிறாய்?''

''போருக்குச் செல்லும்போது சோடா பாட்டில்களை எடுத்துக் கொண்டு போகிறாரே!''

- அஜித்லால்



# சிரிங்க!



"உங்க வியாதிக்கு சிவப்பு மாத்திரை மட்டும் கேட்கறீங்களே... ஏன்?"

"இந்த வாரம் சிவப்புதான் எனக்கு ராசியான கலர்னு டீ.வி.ல சொன்னாங்க!"

- அம்பை தேவா

"மொய் எழுதற இடத்துல எதுக்கு இவ்வளவு கூட்டம்?"

"முதல்ல எழுதற 10 பேருக்கு பார்சல் சாப்பாடு இலவசம்னு அறிவிச்சுருக்காங்க!"

- அம்பை தேவா



"கால்நடைக்கு லோன் கேட்கறீங்களே, ஒழுங்கா கட்டுவீங்களா...?"

"வீட்டுக்கு பின்னாடி காலி இடம் இருக்கு சார்... ஒழுங்கா கட்டிடுவேன்."

- தங்கராஜ்



அரையிருட்டில் தலையணையில் சாய்ந்து படுத்திருந்த ராகவேந்தருக்கு பணிவிடைகள் செய்யப்பட்டு, தலை சீவி முகச்சவரம் செய்யப்பட்டு, உடம்பு துடைத்துவிட்டு பவுடர் பூசி உணவூட்டி, மருந்துகள் வேளைக்கு வேளை புகட்டப்பட்டு தெள்பாகத்தான் .தோன்றினார். எதிரே தொலைக்காட்சிப் பெட்டியில் அந்த சைதுக் காட்சிகள் இன்னும் ஓடிக் கொண்டிருந்தன. பொருளாதார நிபுணர்கள் அதன் தாக்கத்தை அலசிக் கொண்டிருந்தார்கள். நியூயார்க், மும்பை, தேசிய பங்குச் சந்தை



யில் ஏற்பட்ட பின்விளைவுகளை வரை படங்களாக இளம் பெண்கள் அலசிக் கொண்டிருந்தார்கள்: மெல்ல எதையோ மென்று கொண்டு ராகவேந்தர் அதைப் பார்த்துக் கொண்டிருந்தார். மீனாட்சியும், ராஜன் ஸ்ரீராமும் பின் தங்க "எல்லாரையும் ஜெயில்ல போட்டாச்சா'' என்று பணிவிடை செய்யும் பெண்ணைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

"தாத்தா, இவங்கள்லாம் என்ன தப்பு செய்தாங்கன்னே புரியலை. பணக்காரங்க வூட்டுப் பிள்ளைங்களா தெரியறாங்க'' என்றான், புதிதாக டியூட்டி பார்க்க வந்தவன்.

"அண்யா" என்று மஞ்சரி மறுபடி கூப்பிட்டாள்.

"தாத்தா இவங்க வந்திருக்காங்க... யாரு நீங்க? செக்யூரிட்டி எப்படி உள்ள விட்டான்?"

"இது என் மவ! டீ.வியை அணை'' என்றார்.

மஞ்சரி நெருங்கினாள். ''கிட்ட உக்காராதீங்கம்மா."

"அடிப்போடி" என்று அவளை அதட்டி, மஞ்சரியை அருகில் அழைத்து தன்னுடன்

''இல்லைம்மா, மன்னிப்புக் கேக்க வேண்டியது நான். என்னாலதான் இந்த சூழ்ச்சியெல்லாம் நடந்தது. என் உசுரை தாங்கிப் பிடிக்கத்தானே இத்தனை அநியாயமும் நடந்தது."

"இல்லை அண்யா."

கோபத்துடன், ''நீ சும்மாரு. குறுக்க பேசாம, நான் சொல்றதை நீ கேட்டாகணும்."

''அய்யா ஸ்ட்ரெய்ன் பண்ணிக்கவே கூடாதுன்னு.."

"போடி மூதி" என்று பணிப்பெண்ணை அதட்ட, அவள் முகம் சிறுத்தது.

"நீ கொஞ்ச நேரம் வெளிய இரும்மா. நான் பாத்துக்கறேன். இவர் என் அப்பா தான்."

"என் கடமையை செஞ்சேன். அப்புறம் என்ன..."

"உன்னை யாரும் ஒண்ணும் சொல்ல மாட்டாங்க. நான் செத்தா பரவால்லை, போ மூதல்ல."





# உள்ளம் துறந்தவன்

சேர்த்துக் கொண்டு முதுகில் தட்டி கண்ணீர்ப் பிரவாகத்தால் நனைத்தார். மஞ்சரியும் அடக்க முடியாமல் சற்று நேரம் அழுதாள். "என்னை மன்னிச்சுக்கங்க அண்யா. இந்த மாதிரி விபரீதமாகும்னு கனவுல கூட நெனைக்கலை. அண்யா, என்னை மன்னிச்சுருங்க!"

"மஞ்சரி, கேளு. திருடப்பட்ட இருதயம், பறிக்கப்பட்ட இருதயம், பிடுங்கப்பட்ட இருதயம் எனக்கு வைக்கிறாங்கன்னு சொல்லியிருந்தா, சம்மதிச்சிருக்கவே மாட்டேம்மா. அவ்வளவு மோசமானவன் இல்லை நான். எனக்குத் தெரியவே தெரியாதும்மா, இதை ஒத்துக்குவியா?"

''நிச்சயமா அண்யா."

''செத்துப் போயிறத்

31

தோணுது. இளவயசுக்காரன் கிட்ட களவாடி, கிழவன பிழைக்க வைக்கிறதாவது! அநியாயம். யயாதி கதை மாதிரி, அபத்தம்மா. இந்த மாதிரி அபத்தத்தை நாகரத்னம், அந்த நாகப்பாம்பு, அவனும் பார்கவாவும் சேர்ந்து செய்த மகா பாவம், எப்படி ஒரு ஆணுடைய மனசு சம்மதிக்கும்? எனக்கு உயிர் வாழவே பிடிக்கலை.



உனக்காகத்தான் காத்திருந்தேன். உன்னை எல்லாரும் தேடிக்கிட்டிருக்காங்க. எச்சரிக்கையா இரு. உன்னையும் போட்டுத் தள்ளிருவானுக. என்னை அவங்க உசுரோட வெச்சிருக்கறதுக்கு ஒரே காரணம், இன்சாஃப் ஸ்டாக் விழாம இருக்கத்தான். எல்லாத்தையும் தூக்கிப் போட்டுட்டு, போங்கடான்னு எறியப் போறேன்..."

நர்ஸ் பத்து மாத்திரைகளைக் கொண்டு தர,

"மருந்தும் வேண்டாம் ஒண்ணும் வேண்டாம் போ" என்று மாத்திரைகளைத் தட்டி விட்டார். அவை தரையில் சிதறின.

மஞ்சரி பொறுமையாக அவற்றைப் பொறுக்கி, மெல்ல ஒவ்வொன்றாக அவர் வாயில் வைத்துத் தண்ணீர் கொடுத்தாள். அவளைக் கண்ணீர்க் கண்ணாடிக் கண்களால் பார்த்து,

"உன்னை மாதிரி ஒரு ஆத்மாதான் என் உசிரை இருக்கத் தூண்டுது. சொல்லு கண்ணு, நான் என்ன செய்யணும்?"

"ஒழுங்கா மாத்திரை சாப்பிடணும். இந்த மாதிரி தட்டி எறியக் கூடாது."

"நான் ஒண்ணு சொல்றேன், கேக்கறியா?"

"சொல்லுங்க அண்யா."

"அமெரிக்கா போ."

"பாலா மாமாகிட்டயா?"

"இல்லை, பாலாவும் உடந்தைன்னுதான் சந்தேகப் படறாங்க."

"இல்லை."

"எல்லா டாக்டரையும் அரஸ்ட் பண்ணிருக்காங்களே பின்ன? அது கெடக்கட்டும். உன்னை அமெரிக்கா போகச் சொன்ன காரணம், பாலாவை சந்திக்கவோ, அங்க தங்கவோ இல்லை. ஹார்வர்ட் பிசினஸ் ஸ்கூல் கேள்விப்பட்டிருக்கியா? அதில் சேர்ந்து ஒரு கோர்ஸ் பண்ணு. கார்ப்பரேட் மேனேஜ்மெண்ட்ல எனக்குத் தெரிஞ்ச ஒருவன்தான் புரொபசரா இருக்கான். அவன்கிட்ட பேசறேன்."

**"ராஜனை கல்யாணம் பண்ணிக்கோம்மா..!"**

"எதுக்கு அண்யா?"

"இன்சாஃப் சாம்ராஜ்யத்தை அடுத்தது நீதானே சமாளிக்கப் போறே. சம்பந்தப்பட்டவங்களையெல்லாம் உள்ள தள்ளிட்டா, யாரு கம்பெனியை எடுத்து நடத்தறது?"

"அண்யா, நான் வேணும்னு செஞ்சனா?"

"இல்லை, தெரியும். ஆமாம், யாரு உனக்கு கம்பெனி நெளிவு சுளிவெல்லாம் கத்துக்கொடுத்தாங்க?"

"இப்ப எனக்கு ஒண்ணும் தெரியாது. ராஜன், வாங்க... அண்யா, இது ராஜன் ஸ்ரீராம். இவர்தான்..."

"ஓ... நீயா? டீவில பார்த்தேன். உன் முகத்தையும் அடிக்கடி காட்டினாங்க..."

"அய்யா, உங்களை நேர்ல சந்திப்பேன்னு கனவில் கூட நினைக்கல. ஆம்தாபாத் எம்.பி.ஏல உங்க கார்ப்பரேஷனை பாடமா படிக்கிறாங்க!"

"நீயும் ஆம்தாபாத்தா?"

"ஆமா. ஆனா எந்த ஐஐஎம்மும் கத்துத் தராத விஷயங்கள், இந்தப் பதினஞ்சு நாள்ல கத்துக்கிட்டேங்க."

"அதான பாத்தேன். கம்பெனி லா எல்லா விதிகளையும் தெரிஞ்சிருக்கே. மஞ்சு இவனையே செக்ரட்ரியா போட்டுக்க."

"சொல்லிப் பாருங்க."

"இல்லை அண்யா, எனக்கு இந்த விளையாட்டினுடைய விதிகள் எதுவும் தெரியாது. தெரிஞ்சுக்க விரும்பலை. இந்த விபரீத விளையாட்டு அழகேசன்னு ஒரு நல்ல ஆத்மாவைக் கொன்னுடுச்சு. ஐ ஹேட் திஸ் கேம்."

"இப்பவே சொல்லாத, யோசிச்சு சொல்லு. என்ன பண்றதா உத்தேசம்?"

"அம்மா, முன்னால வாங்க."

"இது வந்து மீனாட்சி, அழகேசனுடைய தாய்."

அவர் திகைத்துப் போய் செய்வதறியாமல், அவள் கையைப் பிடித்துக்கொண்டு கண்ணில் ஒத்திக் கொண்டார்.

"அம்மா எந்த உலகத்திலும், எந்த யுகத்திலயும் உங்க மகனுக்கு நேர்ந்ததை நியாயப்படுத்த முடியாது. நான் உயிரோட இருக்கறது, ஒரே ஒரு காரணத்துக்காக. உங்க மகன் போல இதய நோய் உள்ளவர்களுக்கு ஒரு ஸ்பெஷாலிட்டி ஆஸ்பத்திரி கட்டப் போறேன். உன் பேர் என்ன சொன்ன?"

**"எனக்கு ஏற்கெனவே கல்யாணம் ஆயிருச்சு அண்யா!"**

"அய்யா, ராஜன் ஸ்ரீராம்."

"ராஜன், இந்தக் காரியத்தை எடுத்து நடத்துவியா? ஒப்படைக்கவா?"

"நிச்சயம் செய்யறேன்யா."

"மஞ்சு கண்ணு, அதுவரைக்கும் நான் உசிரோட இருக்கேன்மா."

"அதுக்கப்புறமும் இருப்பீங்க."

"நீ என்ன செய்யப்போறே?"

மஞ்சரி தன் முகத்தைத் துடைத்துக் கொண்டாள். "சொல்றேன் அண்யா, அழகேசனோட கண்களை பார்வை இழந்த ஒரு சின்னப் பெண்ணுக்கு தானம் கொடுத்திருக்காங்க. அவர் லிவரை ஒரு அம்பது வயசுக் காரருக்கு ட்ரான்ஸ்ப்ளாண்ட் பண்ணியிருக்காங்க. ரெண்டு கிட்னியையும் ரெண்டு பேர் எடுத்துக்கிட்டிருக்காங்க. அவங்க ஒவ்வொருத்தரா விசாரிச்சு, அவங்களைப் போய்ச் சந்திக்கப் போறேன். அம்மாவைக் கூட்டிக்கிட்டுப் போறேன்."

"அதுக்கப்புறம்?"

"அதுக்கப்புறம் யோசிக்கலை."

"ஹார்வர்ட் போ. கல்யாணம் பண்ணிக்க. இதோ இந்தப் பையன் எவ்வளவு சாமர்த்தியமா இருக்கான். உனக்கு எல்லா விதத்திலயும் பொருத்தமா, உதவியா இருப்பான். என்னய்யா, எம்மவளைக் கட்டிக்கறியா?"

ராஜன் ஸ்ரீராம் "இப்ப வேங்க" என்றான்.

மஞ்சரி அழுத்தமாக, "அண்யா, எனக்குக் கல்யாணம் ஆயிருச்சு" என்றாள். மீனாட்சி



ராகவேந்தரையே பார்த்துக் கொண்டிருந்தவள் "பெரியய்யா, உங்களை ஒண்ணு கேக்கலாமா?"

"கேளுங்கம்மா."

"தப்பா நெனச்சுக்காதீங்க. உங்களைத் தொடலாமா?"

"என்னம்மா இப்படிக் கேட்டுட்டீங்க. வாங்க."

மீனாட்சி அவரருகில் வந்து தன் உள்ளங்கையை அவர் மார்பில் வைத்துப் பார்த்து, அதன்பின் காதை வைத்துக் கேட்டாள்.

"புள்ள, நீயும் வா. காது கொடுத்துக் கேளு. எப்படி படக்கு படக்குனு அடிக்குது பாரு. அழகேசன் உயிரோடத்தான் இருக்கான்."

(முற்றும்)



• 'பொன்னியின் செல்வன்'



• ராதாமோகன்

'பொன்னியின் செல்வன்', 'கள்வனின் காதலி' - சாகாவரம் பெற்ற அமரர் கல்கியின் இவ்விரு நாவல்களுக்கும் வாசகர்கள், ரசிகர் மன்றம் வைக்காத குறைதான்.

பெரும்பாலும் அர்த்தம் இல்லாமலும் ஆங்கிலத்திலும் தலைப்புகள் வைத்தே பழக்கப்பட்டுப் போன தமிழ் சினிமாவில், இப்பொழுது இந்த இரண்டு நாவல்களின் பெயர்களிலும் படங்கள் தயாராகி வருகின்றன.

இதுநாள் வரைக்கும் 'பொன்னியின் செல்வன்' மற்றும் 'கள்வனின் காதலி' பெயர்களைக் கேட்டாலே அதன் வீரமிக்க கதாபாத்திரங்கள்தான் நம் கண்முன் வந்து நிற்கும். இப்படங்களால் அந்நிலை இனி மாறி விடாதா? அவ்விரு நாவல்களுக்கும் உரிய மதிப்பும், தனித்தன்மையும் இனி குறைந்துவிடாதா என்று சம்பந்தப்பட்ட இயக்குனர்களிடம் கேட்டோம்.

முதலில் நம்மிடம் பேசியது எஸ்.ஜே.சூர்யா நயன்தாரா நடிக்கும் 'கள்வனின் காதலி' இயக்குனர் தமிழ்வாணன்.

''கதையின் ஹீரோ ஒரு கள்வன். அவன் குடும்பப் பெண்ணான ஹீரோயினைக் காதலிப்பான். கதை கள்வனையும் காதலியையும் சுற்றியே நடப்பதால், அதற்குப் பொருத்தமாகக் 'கள்வனின் காதலி' என்று பெயர் வைத்தேன்'' என்றவரிடம் ''படத்தின் கவர்ச்சியான புகைப்படங்களைப் பார்த்தால், கல்கியின் பெயரைக் காற்றில் பறக்கவிட்டு விடுவீர்கள் போல் தோன்றுகிறதே...'' என்றவுடன் பதறிவிட்டார்.

''நான் கல்கி அவர்களின் ரசிகன். அவர் மயிலாடுதுறையில் படித்த நகராட்சிப் பள்ளியில்தான் நானும் படித்தேன். இதைப் பல இடங்களில் பெருமையாகக் கூறியிருக்கிறேன். அப்படியிருக்கும் பொழுது நானே கல்கியின் புகழுக்கு பங்கம் விளைவிப்பேனா?

நீங்கள் சொல்லும் கவர்ச்சியான புகைப்படங்களெல்லாம் படத்தின் வியாபாரத்துக்காக எடுக்கப்பட்டவை. நிச்சயம் அவை படத்தில் இடம் பெறாது. ஹீரோவும் ஹீரோயினும் கிளைமாக்ஸில்தான் சேருவார்கள். அதனால் 'கள்வனின் காதலி'

# கல்கியின் பெயரைக்



• 'கள்வனின் காதலி'



• தமிழ்வாணன்

நாவலுக்கும், கல்கி அவர்களின் புகழுக்கும் சிறிதளவு சேதாரம் கூட இருக்காது. அதற்கு நான் பொறுப்பு'' என்றார் உறுதியாக.

'அழகிய தீயே' படத்தின் மூலம் நம்பிக்கைக்குரிய இயக்குனராக உருவெடுத்திருக்கும் ராதா மோகன், 'பொன்னியின் செல்வன்' தலைப்பு குறித்துப் பேசும்பொழுது...

''சிறு வயதிலிருந்தே கல்கியின் நாவல்களை ஆர்வத்துடன் படித்து வருகிறேன். பொன்னியின் செல்வனை மட்டும் பத்து முறைகளாவது படித்திருப்பேன். என் படங்களின் கதாபாத்திரங்களுக்குப் பெயர் வைக்க முதன் முதலாக பொன்னியின் செல்வனைத்தான் புரட்டுவேன். அந்த அளவுக்கு என்னைக் கவர்ந்த நாவல் அது.

எனது படத்தில் பொன்னியாக ரேவதியும், அவரது மகனாக ரவிகிருஷ்ணாவும் நடித்துள்ளனர். தாய்-மகன் உறவை கவிதையாகச் சொல்லும் படமென்பதால், 'பொன்னியின் செல்வன்' என்கிற பெயர் இதற்குப் பொருத்தமாக அமைந்தது. 'அழகிய தீயே' போல, இந்தப் படத்தையும் க்ளீன் பிக்சராகத்தான் எடுத்திருக்கிறேன்'' என்றவர், தொடர்ந்து...

''இன்றைய தலைமுறையினருக்கும் கல்கி அவர்களைப் பற்றி நன்றாகவே தெரிந்திருக்கிறது. காலம் கடந்தும் நிற்கக் கூடியது கல்கியின் படைப்புகள். மூன்று மணி நேர சினிமா வந்து, அதை ஒன்றும் செய்துவிட முடியாது'' என்றார் ஆணித்தரமாக.

- சநகன்

# காப்பாத்துவீங்களா?



# படிக்கல்லாய்

நேதாஜி - பிறவியிலேயே பார்வையற்றவரல்ல... அவருக்கு இருபத்து மூன்று வயதாகும்போது பார்வை படிப்படியாகக் குறையத் தொடங்கியது. அவரைப் பரிசோதித்த கண் டாக்டர்கள், "உனக்கு வந்துள்ளது ரெடினைடிஸ் பிக்மென்டோசா என்ற நோய். இதற்கு மருந்து கிடையாது. கண்பார்வை போனது போனதுதான். இப்போது நடந்து கொண்டிருக்கும் ஆராய்ச்சிகளின் பலனாக, இன்னும் பத்து வருடங்களில் மருந்து கண்டு பிடித்து விட முடியும் என்று மேல்நாட்டு கண் மருத்துவ நிபுணர்கள் நம்புகிறார்கள்'' என்று சொல்லிவிட்டார்கள். என்ன செய்தார் நேதாஜி? இதோ அவரே சொல்கிறார்...

"எங்களுடையது சாதாரண மத்திய வர்க்கத்துக் குடும்பம். நான்தான் மூத்தவன். கண் பார்வைக் குறைவு இருந்தாலும், சொந்தக் காலில் நிற்க வேண்டும் என்று உறுதி பூண்டு, படித்து முடித்தேன். மாங்காட்டில் உள்ள ஒரு மேல் நிலைப் பள்ளியில் வேலை கிடைக்க, முழு ஈடுபாட்டுடன், பாடம் சொல்லிக் கொடுத்து, நூறு சதவிகித தேர்ச்சி பெற வைத்தேன்.

அந்தச் சமயத்தில், பழனியில் உள்ள போகர் ஆசிரமத்தில் மூலிகைகளைக் கொண்டு, கண்ணுக்குச் சிகிச்சை அளிப்பதாகக் கேள்விப்பட்டு, அங்கு சென்றேன். 'காலத்தைப் பொருட்படுத்தாத நிலை இருந்தால், விதியில் மாற்றம் காண முடியும் என்பதை அனுபவத்தின் வாயிலாகப் புரிந்து கொண்டு வாழவும்' என்று போகரின் அருள்வாக்கு கூறப்பட்டது. அந்தக் கணமே நம்பிக்கையுடன் பழனியிலேயே தங்கி, கண்ணுக்கு மூலிகை சிகிச்சை பெறுவது என்று தீர்மானித்தேன். தற்போது பழனி ஆண்டவர் கல்லூரியில் பகுதிநேர லெக்சரராகப் பணிபுரிந்து வருகிறேன்.

இடையில் பார்வைக் குறைவு என்கிற தடைக்கல்லையே படிக்கல்லாக மாற்றிக் கொள்ள முடிவு செய்தேன். உடல் ஊனமுற்றோருக்கான விளையாட்டுப் போட்டிகளில் தேசிய அளவிலும், அகில உலக அளவிலும் கலந்து கொண்டு சாதனை புரிந்தால் என்ன என்ற எண்ணம் தோன்றி, அதற்கான பயிற்சிகள் செய்ய ஆரம்பித்தேன். வேலை நேரம் போக, மாலை நேரங்களில் நண்பர்கள் உதவியுடன், மைதானத்தில் பயிற்சி செய்தேன். உபகரணங்கள் கிடைக்காத சமயத்தில், கனமான கூழாங்கல், நீண்ட கொம்பு, வட்டமான தட்டு மாதிரியான கல் போன்றவற்றைப் பயன்படுத்தி பயிற்சி செய்தேன். தேசிய அளவில் உடல் ஊனமுற்றவர்களுக்கான போட்டிகளில், பார்வையற்றவர்களுக்கான பிரிவில் பங்கேற்ற நான், தங்கம் மற்றும் வெள்ளிப் பதக்கங்கள் பெற்றபோது, 'நம்மாலும் சாதிக்க முடியும்' என்ற நம்பிக்கை எனக்குள் பிறந்தது.

தொடர்ந்து அயல்நாடுகளில் நடைபெறும் ஊனமுற்றவர்களுக்கான தடகளப் போட்டிகளிலும் கலந்து கொள்ள ஆரம்பித்தேன். 2001ல் டச்சு ஓப்பன் அத்லெட்டிக்ஸ் போட்டியில் கலந்து கொண்டு, இரண்டு தங்கப் பதக்கங்கள் ஜெயித்தேன்.

சிட்னியில், உடல் ஊனமுற்றோர் ஒலிம்பிக்ஸ் நடந்தபோது, எனக்கு



• நேதாஜி

# மாறிய தடைக்கல்!

சிங்கப்பூர் வரை மட்டுமே உதவி கிடைத்தது. அதனால் ஒலிம்பிக்ஸ் போட்டியில் கலந்துகொள்ள முடியாமல் போய்விட்டது.

கடந்த மாதம் மான்செஸ்டர் நகரில், பிரிட்டிஷ் ஓப்பன் அத்லெட்டிக்ஸ் சாம்பியன்ஷிப் போட்டி நடந்தது. எனக்கும், என் உதவியாளருக்குமாகச் சேர்த்து, லண்டனுக்குச் சென்று வர இரண்டு லட்ச ரூபாய் வரை தேவைப் பட்டது. ஆனால் போதிய பணவசதி கிடைக்காததால், உதவியாளர் இல்லா மல், நான் மட்டும் தனியாகச் செல்லும் படி ஆனது. ஆனாலும், நான் குண்டு எறிதலில் தங்கப் பதக்கமும், நீளம் தாண்டுதல் மற்றும் ஈட்டி எறிதில் வெள்ளிப் பதக்கமும் ஜெயித்தேன்.

அண்மையில், என்னைப் பரி சோதித்த சென்னை டாக்டர்கள், பார்வைக் குறைவு மேலும் மோச மாகாமல் தடுத்து நிறுத்தப்பட்டிருப்பது குறித்து ஆச்சரியப்பட்டனர். மூலிகைச் சிகிச்சை மூலம் ஒருநாள் நான் இழந்த கண்பார்வையைப் பெறுவேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.

தகுதியின் அடிப்படையில் எனது பகுதி நேர வேலையை நிரந்தரமாக்கித் தரவேண்டும் என்ற வேண்டுகோளுடன், முதலமைச்சரைச் சந்திக்கக் கடுமையாக முயற்சித்துக் கொண்டிருக்கிறேன். துரதிருஷ்டவசமாய், அது இன்னமும் நிறைவேறவில்லை."

- எஸ். சந்திரமௌலி

# இங்கு பார்த்த ஷூட்டிங்!

நியூசிலாந்தில் சென்ற வாரம் திரைப் படக் குழுக்களுக்குச் சில கடுமையான கட்டுப்பாடுகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். படம் எடுக்கிறோம் பேர்வழி என்று சொல் லிக்கொண்டு, அங்குள்ள இயற்கை கொஞ் சும் பூங்காக்களை ஈ மொய்க்கும் குப் பைத் தொட்டியாக இவர்கள் மாற்றி வருவதால் தான் இந்தப் புதிய கட்டுப்பாடுகள்.

சமீபத்தில் பி.பி.சி. குழுவினர் 'தி லாஸ்ட் வேர்ல்டு' எனும் நிகழ்ச்சிக்காக, நியூசிலாந் தில் கூடாரம் போட்டு அமர்க்களப்படுத்தி யிருக்கிறார்கள். . படப்பிடிப்பு நடந்து கொண்டிருக்கும்பொழுது அருகிலிருந்த மிருகக் காட்சி சாலையில் வேடிக்கை பார்த் துக் கொண்டிருந்த ஒரு குரங்கு, இவர்களது தொல்லை தாங்காமல் கூண்டிலிருந்து தப்பி ஓடிவிட்டதாம். நிகழ்ச்சி பிடிக்காததாலா அல்லது வேறு சில பிரத்யேக காரணங் களாலா என்பது தெரியவில்லை. இருந் தாலும் 'இதற்குக் காரணம் பி.பி.சி. செய்த அட்டகாசங்கள்தான், பாவம் அந்த வாயில் லாக் குரங்கு' என்கிறார்கள் நியூசிலாந்துக் காரர்கள்.

அது மட்டுமல்ல, சண்டைச் காட்சி எடுக்கிறோம் என்று சொல்லி ஹெலிகாப்டரை தலைக்குச் சற்று மேலே பறக்கவிட்டு அலறவைப்பது, கனவுக் காட்சி என்று சொல்லி கொசு மருந்து போல புகை போடு வது என்று திரைப்படக் குழுக்களின் 'சேவைகள்' அதிகரித்துக் கொண்டே போகின்றனவாம்.

நியூசிலாந்து படக்குழுக்களாவது பரவா யில்லை. ஐந்து நிமிட கனவுப் பாடலுக்காக வேறு நாடுகளிலிருந்து ஃப்ளைட் பிடித்து வருபவர்களின் டார்ச்சர் தாங்க முடிய வில்லையாம். கண்ணில் பட்ட கட்டடத் துக்கு முன்னால் நாயகனையும் நாயகியை யும் ஆட விடுவது, கிவி, கங்காரு உட்பட அனைத்துப் பிராணிகளையும் கட்டிப் பிடித்து போஸ் கொடுப்பது, புல்வெளியில் கதாநாயகியை உருள விடுவது என்று நியூ சிலாந்தை ஒரு வழி செய்கிறார்களாம். (யாரைச் சொல்கிறார்கள் என்று புரிந் திருக்குமே!)

பொறுத்துப் பொறுத்து பார்த்த திரைப் பட நிர்வாகமும், இயற்கை பாதுகாவலர் களும் சட்டையை மடித்து விட்டுக் கொண்டு, சில கடுமையான வரைமுறை களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அவை யாவன : இனி இயக்குநர்கள் படப்பிடிப் பின் பொழுது பூனையை மடியில் கட்டிக் கொள்ள வேண்டும். அதாவது உள்ளூர் லொகேஷன் மேனேஜர் ஒருவரை உடன் வைத்திருக்க வேண்டும். அந்த மேனேஜர் கண் கொத்திப் பாம்பு போல இயக்குநரைப் பார்த்துக் கொண்டேயிருப்பார். குட்டி புல்லுக்கோ, க்ரோட்டன்ஸ் செடிக்கோ, பாக்டீரியா உள்ளிட்ட உயிரினங்களுக்கோ சிறிதளவு குறைபாடு ஏற்பட்டாலும் ஓடி வந்து 'கட்' சொல்லி காமிராவை மூடிவிடு வார். எவ்வளவு அழகிய கதாநாயகியாக இருந்தாலும் சரி... தப்பித்தவறி அவரது ஹீல்ஸ் ஸ்லிப்பர் ஊர்ந்து போகும் ஒரு குட்டிப் புழுவின் குதிகாலை மிதித்து விட் டால் கூட போதும். 'அப்ஜெக்ஷன் யுவர் ஆனர்' என்று அடிக்குரலில் கத்தியபடி, நேராக அவரது கையை பிடித்து தரதர வென்று இழுத்து சென்று கோர்ட்டில் நிற்க வைத்து விடுவார்.

அதேபோல் 'டாய்ய்ய்ய்' என்று கத்திய படி அரிவாளைத் தூக்கி கொண்டு நியூசிலாந்து தெரு வில் யாரும் யாரையும் துரத்திக் கொண்டு ஓடக் கூடாது. வேண்டுமென் றால் ஒரு குட்டி சைஸ் ப்ளேடை பாக்கெட்டில் போட்டுக் கொண்டு மிக மெதுவாக 'டோய்' என்று முணுமுணுத்தபடி அடிப்பிர தட்சணம் செய்வதைப் போல பம்மிப் பம்மி நடக்கலாம்.

இப்படியாக ஒரு பக்கம் கட்டுப்பாடு கள் அதிகரித்துக் கொண்டே போக, மற்றொரு பக்கம் கட்டுப்பாடுகளை தளர்த் திக் கொண்டு வருகிறார்கள் லண்டன் ரீஜெண்ட்ஸ் பார்க்கில் உள்ள மிருகக் காட்சி சாலையில். சமீபத்தில் இங்கு கூண்டுக்குள் கம்பி எண்ணிக் கொண்டிருந்த சில பறவைகளை வெளியில் விட்டு விட்டார்கள். அதாவது பார்வையாளர்கள் சஃபாரி முறையில் உலாத்திக் கொண்டே

# உலகம் இவ்வளவுதான்!



பறவைகளை வேடிக்கை பார்ப்பதற்கான ஒரு வாய்ப்பை உருவாக்கியிருக்கிறார்கள். இத்தோடு விட்டிருந்தால் பரவாயில்லை. கூடிய விரைவில் கொரில்லா, சிங்கம், ஒட்டகச்சிவிங்கி, புலி எல்லாவற்றையும் கூண்டிலிருந்து வெளியே விடப் போகிறார்களாம். நம்மைப்போலவே அவை உலாத்திக் கொண்டிருக்குமாம்.

விலங்குகள் பிரிவின் தலைவராக இருக்கும் டேவிட் ஃபீல்ட் சொல்வதைக் கேளுங்கள். "இனி கவலையில்லை. பொதுமக்களும் மிருகங்களும் ஒருவரையொருவர் பர்சனலாக அறிந்து கொள்ள முடியும்''. அது சரி, சிங்கத்திடமும், புலியிடமும் அப்படி எதைப் பற்றி 'பர்சனலாக' மனக விட்டுப் பேசப்போகிறோம்? பசி எடுக்கும் நேரம் பார்த்து நாம் சிங்கத்தோடு பர்சனலாக பேசிக் கொண்டிருக்கும்பொழுது, அது நம்மைப் புசித்து விட்டால் என்ன செய்வது?

இப்படிக் கேட்டால் அதற்கு வேறு மாதிரியாக பதில் சொல்கிறார் டேவிட். "கூண்டுகளைத் திறந்து விடப்போவது உண்மைதான். ஆனால் அதற்காக பாதுகாப்பே கொடுக்காமல் இருக்கமாட்டோம். சில புதிய செயல்முறைகளை உருவாக்கப் போகிறோம்" என்கிறார். அதாவது கூண்டுக்கு பதிலாக அகழி, கண்ணாடித் தடுப்பு போன்றவற்றை அதிகரிக்கப் போகிறார்களாம். கொரில்லாக்களுக்காக வரும் ஜனவரியில் சுமார் 5 மில்லியன் பவுண்டில் ஹைடெக் பாதுகாப்பு வளையம் ஒன்றை அமைக்க இருக்கிறார்கள். அப்படியானால் சரி, இனி சிங்க ராஜாவின் தாடியைப் பிடித்துத் தடவியபடி கதை பேசலாம், அதுவும் 'உம்' கொட்டிக் கேட்கும் என்றெல்லாம் நினைக்கக்கூடாது.

- மருதன்



# கோமா

**கா**லிங் பெல் ஒலித்தது.

பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்த திவ்யா கதவைத் திறந்தாள்.

வீட்டு ஓனர். "அம்மா இருக்காங்களாம்மா?"

திவ்யா உள்பக்கம் பார்க்க, அவள் அம்மா கௌரி வேகமாக வந்தாள்.

"என்னம்மா, தேதி பத்தொம்பது ஆச்சு, இன்னும் வாடகைப் பணம் வரலியே."

"உக்காருங்க நாயுடு சார். திவ்யா, ஒரு டம்ளர் மோர் கொண்டாம்மா."

"அதெல்லாம் வேண்டாம்மா. வாடகையை வழக்கமா முதல் தேதியில்லாவிட்டாலும் முதல் வாரத்தில் கொடுத்துடுவீங்க. இந்த தரம் என்னாச்சு..?"

"எம் பொண்ணு ரெண்டு வாரமா.."

"ஆமாமா, கோமாவிலே படுத்திருக்குன்னு கேள்விப்பட்டேன். எனக்குத் தெரியாது. என் சம்சாரம்தான் சொன்னா. பாவங்க, துள்ளித் திரிஞ்சி வாயாடியா ரகளை பண்ணிக்கிட்டிருந்த சுட்டிப் பொண்ணுக்கு இப்படி ஒரு கொடுமையான்னு வாய் விட்டு அழுதுட்டா."

"ஆமாங்க. அக்கம் பக்கத்திலேயும் இதேதான் பேச்சு. பதில் சொல்லி மாளலை. எப்ப விடிவு பிறக்குமோன்னு தெரியலை. பாதி சம்பளத்திலே சமாளிக்கிறதுன்னா கஷ்டமாயிருக்கு."

"ஓடிப்போயிட்ட புருஷன். வேலைக்குப் போற சுஷ்மா, காலேஜ்ல படிக்கிற திவ்யா, இந்த ரெண்டு பெண்களையும் வச்சிக்கிட்டு நீங்க படற கஷ்டம் எனக்குப் புரியுதும்மா. அதனால்தான் உங்களுக்குக் கொஞ்சம் கம்மி வாடகைக்கு விட்டிருக்கேன். ஆனா, எனக்கும் ஏகப்பட்ட செலவுகள் இருக்கு. நாலஞ்சு வீடுகளிலிருந்து வர்ற வாடகையில்தான் என் ஜீவனம். ம்.. ம்.. உங்க பொண்ணு பழையபடி துறுதுறுன்னு ஓடியாடி அமர்க்களம் பண்ணணும். அதை நாங்க எல்லோரும் பார்க்கணும். நான் வர்றேம்மா. வாடகை விஷயம் கொஞ்சம் ஞாபகம் வச்சிக்குங்க."

அவர் போனதும் கொஞ்சம் சில்லறையுடன் பக்கத்து டெலிபோன் பூத்துக்குப் போனாள் கௌரி.

"வணக்கம் சார். நான் சுஷ்மாவோட அம்மா பேசறேன். அதாங்க, கோமாவில இருக்காளே.. உங்களுக்குத் தெரியாததா? ஆமாம், ஒரு தடவை எனக்கு ரொம்ப காய்ச்சலா இருந்ததால, சுஷ்மா ஷூட்டிங்குக்கு வர லேட்டாகி, அந்த மாஜி சினிமா ஸ்டார் தாரிணி கோவிச்சுக்கிட்டுப் போயிட்டதால நீங்க ரொம்ப கோவப்பட்டு, இவ கேரக்டரை டம்மியாக்கி, கோமாவில படுக்க வச்சுட்டீங்க. ரொம்பக் கஷ்டமாயிருக்கு. இனிமே அப்படி நடக்காதுங்க. தயவு செஞ்சு உடனே அவளை கோமாவிலிருந்து குணப்படுத்தி, சீரியலில் அவளோட பழைய ரோலைக் கொடுக்கணும். சரிங்க சார். சரிங்க, நாளையிலிருந்து ஷூட்டிங்குக்கு வரலாமா? ரொம்ப நன்றி டைரக்டர் சார்."

ஆர்.மாலதிதமன்

இது புதுசு

# ஒரு ஜோடி வளையல்கள்!

சுதா மூர்த்தி

எங்கள் அலுவலகத்தில் லீலா நெடுநாட்களாக வேலை பார்த்து வருகிறாள். அவளைப் பற்றிய தகவல்கள் எதுவும் எனக்குத் தெரியாது. ஏனைய சில பெண்களின் நிலைமை போலத்தான். கணவன் கைவிட்டுவிட்டு, வேறொரு பெண்ணைத் தேடிப் போய்விட்டான் என்று மட்டுமே தெரியும். மூன்று பெண்கள். கடுமையான உழைப்பாளி. யாரோடும் அதிகம் பேச மாட்டாள். வெகு நாணயமான பெண்.

அன்று லீலா வந்து என் முன்னால் நின்றாள். அது அவள் வழக்கமே அல்ல. தயங்கித் தயங்கி, மெதுவான அடிக் குரலில், "அம்மா, எனக்கு 20,000 ரூபாய் வேண்டும்!" என்று சொல்லி, ஒரு பழைய நைந்த துணியை என் முன் வைத்தாள். எனக்குத் தலையும் புரியவில்லை, வாலும் புரியவில்லை.

"எதற்கு லீலா, உனக்கு அத்தனை பணம்? ஏதாவது விசேஷமா?"

அவளுடைய இரண்டு மகள்களுக்குத் திருமணமாகி, குடும்பம் நடத்தி வருகிறார்கள் என்று தெரியும்.

"ஆமாம் அம்மா, என் மூன்றாவது பெண் கல்லூரியில் சேர விரும்புகிறாள். அதற்குப் பணம் தேவைப்படுகிறது."

"அந்தக் கசங்கிய துணி எதற்கு?" என்று கேட்டேன். அவள் ஒன்றும் பேசவே இல்லை. அதைப் பிரித்துப் பார்த்தபோதுதான் தெரிந்தது - இரண்டு தேய்ந்து போன தங்க வளையல்கள் அதில் இருந்தன.

"லீலா, இந்த வளையல்களை எடுத்துக் கொள். நான் லேவாதேவிக்காரர் அல்ல. உன் பெண்ணிடம் பேசிவிட்டு, திருப்தி அடைந்தால், அவள் கல்லூரிச் சம்பளத்தை நான் கட்டுகிறேன். அவளை மதிப்பெண் காகிதங்களுடன் என்னை வந்து பார்க்கச் சொல்."

லீலா மௌனமாய் இருந்துவிட்டு, பிறகு மகளை என்னிடம் அனுப்பி வைப்பதாகச் சொன்னாள்.

அடுத்த நாள் ஓர் அழகான பெண், சாதாரண உடையில், என் அலுவலகத்தில் எனக்காகக் காத்திருந்தாள். அவளைப் பார்த்தபோது, அழுக்குத் துணியொன்றில் வைத்த வைரம் மாதிரித் தோன்றியது. அவள் முகத்தில் தெரிந்த பிரகாசம் அவளை புத்திசாலி என்று பறைசாற்றியது. நான் நுழைந்ததும் மரியாதைக்காக எழுந்து நின்றாள். அவள் பேசியபோது குரலில் இனிமை தெரிந்தது.

"அம்மா, என் பெயர் கிரிஜா. லீலாம்மாவின் மகள் நான். அம்மா உங்களைப் பார்க்கச் சொன்னார்."

அவளுடைய மார்க் ஷீட்டை என் முன் வைத்தாள். அவளுடைய மதிப்பெண்கள் பிரமாதமாக இருந்தன. பள்ளிப் படிப்பைத் தவிர பிற விஷயங்களிலும் அவள் நிறைய சான்றிதழ்கள் வாங்கி இருந்தாள். எந்தத் தாயாரும் அவளைப் போலப் பெண்ணை நினைத்துப் பெருமைப்படுவாள். லீலா இப்படிப்பட்ட பெண்ணின் எதிர்காலத்துக்காக, தங்க வளையல்களை அடகு வைக்க முன் வந்தது நியாயம்தான்.

நான் கிரிஜாவை மறுபடி பார்த்தேன். காலைப் பனித்துளி மாதிரியும், அப்போதுதான் மலர்ந்த வெள்ளை ரோஜாவைப் போலவும் இருந்தாள். அவளையும், கறுத்துக் குள்ளமான லீலாவையும் இணைத்துப் பார்க்க முடியவில்லை.

பேசிப் பார்த்தபோது, கிரிஜாவுக்கு அவள் அம்மாவிடமும், சகோதரிகளிடமும் மிகுந்த பாசம் இருப்பது தெரிந்தது.

# உள்ளங்கையில் உலகம்! 1

## இரண்டாம் பாகம்

அவளை அனுப்பிவிட்டு, லீலாவைக் கூப்பிட்டேன்.

"லீலா, உனக்கு மதிய வேளைகளில் சில சமயம் உணவு கொண்டு வரும் உன் இரண்டு மகள்களையும் பார்த்திருக்கிறேன். ஆனால் கிரிஜா வித்தியாசமாக இருக்கிறாள். அவள் மிக அழகாக, மிக சாமர்த்தியசாலியாக இருக்கிறாள். அவளுடைய ஃபீஸை நான் கொடுக்க விரும்புகிறேன். எல்லா வருடமும் தொடர்ந்து அவள் நன்றாகப் படித்தாள் என்றால், அவளுடைய முழு ஃபீஸையும் வருடா வருடம் கொடுத்து விடுகிறேன். அவள் நன்றாகப் படித்தால், அவளுடைய எதிர்காலமே மாறிவிடும்!"

லீலா மெதுவாகப் பேச ஆரம்பித்தாள்.

"அம்மா, உங்களிடம் ஓர் உண்மையைச் சொல்ல வேண்டும். நீங்கள் நேர்மையை மதிப்பவர்கள்... கிரிஜா என் பெண் அல்ல. அவளை நான் தத்தெடுத்தேன்!"

"என்ன!" என்றேன் அதிர்ச்சியுடன்.

லீலா பெருமூச்சு விட்டாள். "அது ஒரு நீண்ட கதை. சுருக்கமாகச் சொல்கிறேன். கொஞ்சம் வருடங்களுக்கு முன் ஓர் இளம் பெண்ணுக்கு வேலை செய்து கொண்டிருந்தேன். அவளுக்கு அது கல்லூரியில் கடைசி வருடம். அவள் பெற்றோர் அமெரிக்காவில் இருந்தார்கள். அவள் கல்லூரிப் படிப்பை முடித்துவிட்டு அமெரிக்காவுக்குத் திரும்ப வேண்டும். நான் அவள் வீட்டில் சமையல் செய்வேன். அவள் என்னிடம் நன்றாகவே நடந்து கொண்டாள். அந்தப் பெண் பிருந்தா அழகாக இருப்பாள். வாழ்க்கையை எளிதாக எடுத்துக் கொண்டவள். அவளுக்கு நிறைய ஆண் சிநேகிதர்களும், பெண் சிநேகிதிகளும் உண்டு. அவர்கள் அவள் வீட்டுக்கு அடிக்கடி வருவார்கள். வாழ்க்கையை முழுதும் ரசித்துக் கொண்டாடி வாழ்ந்தார்கள். எப்போதும் சங்கீதம், டான்ஸ், தமாஷ், பார்ட்டி என்று கலகலப்பாக இருந்தார்கள்.

ஒரு நாள் பிருந்தா ரொம்ப முகம்





## டானிக் தொடர்

வாடி இருந்தாள். என்ன காரணம் என்று கேட்டேன். அவள் கருவுற்றிருப்பதாகவும், அவளுடைய நண்பர்களில் ஒருவன் காரணம் என்றும் சொன்னாள். ஆனால் விஷயம் தெரிந்ததும், அவன் பெற்றோரிடம் அமெரிக்காவுக்குப் போய்விட்டான். பிருந்தாவுக்கு தர்மசங்கடமாயிருந்தது. அவளுக்கு இங்கே யாரும் இல்லை. பெற்றோரிடம் சொல்லவும் வழியில்லை. அவள் கருவைக் கலைக்கச் சாப்பிட்ட மருந்துகளும் பலன் தரவில்லை. காலம் ஆக ஆக, வயிறு பெரிதாயிற்று. பிருந்தா கவலைப்பட்டாள். அவளை மனிதாபிமானம் கொண்டு, பார்த்துப் பார்த்துக் கவனித்துக் கொண்டேன். ஒரு கர்ப்பிணிப் பெண்ணை எப்படி ஊட்டமான உணவு கொடுத்துப் பத்திரமாகப் பார்த்துக் கொள்ள வேண்டுமோ, அப்படி கவனித்துக் கொண்டேன். கடைசியில் அவள் ஒரு பெண் குழந்தையைப் பெற்றாள். அதை ஓர் அனாதை விடுதியில் சேர்த்து விடச் சொல்லிவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டாள். என்னைத் தவிர வேறு யாருக்கும் நடந்தது என்ன என்று தெரியாது. குழந்தையை எடுத்துக் கொண்டு அனாதை இல்லத்துக்குப் போனேன். ஆனால் குழந்தையை அங்கே விடவில்லை. அப்போது என் கணவரும் என்னை விட்டுவிட்டுப் போன சமயம். என் இரண்டு பெண்களும் என்னுடன் இருந்தனர். எனக்கு இருந்ததை இந்த மூன்றாவது குழந்தையுடனும் பகிர்ந்து கொள்வது என்று முடிவெடுத்தேன். அவள்தான் கிரிஜா. அதனால்தான் அவள் அழகாகவும், புத்திசாலியாகவும் இருக்கிறாள்!"

வறுமையிலும் லீலா எடுத்த முடிவை நினைத்து எனக்கு வியப்பாக இருந்தது.

ஒரு நாள் என்னைப் பார்க்க 45 வயதுள்ள ஒருவர் வந்திருந்தார். முன்னதாகவே நேரம் குறித்துக் கொண்டு வரவில்லை என்பதால் என் செயலர், அவரை என்னைப் பார்க்க அனுமதிக்கவில்லை. அவரோ வாக்குவாதம் செய்து கொண்டிருந்தார்.

என் அறை ஜன்னலில் இருந்து இதைக் கவனித்த நான், "பரவாயில்லை, அவரை அனுப்பு. வெகு தொலைவிலிருந்து வருகிறார்" என்று சொன்னேன்.

பெயர் ராமப்பா என்றார். சாதாரண உடை அணிந்திருந்தார். எதற்கு வந்தார் என்று விசாரித்தேன்.

"என் பையன் சோம்நாத் ஒரு கான்ஸர் நோயாளி. இதுதான் விண்ணப்பம். இதோ சான்றிதழ். நான் ஒரு சிறிய கம்பெனியில் கிளார்க். என்னால் சிகிச்சை செலவைத் தாங்க முடியாது. அது இரண்டு லட்ச ரூபாய் ஆகும். நீங்கள் உதவி செய்கிறீர்களா?" என்றார்.

சாதாரணமாக நாங்கள் தனி நோயாளிக்குப் பணம் கொடுப்பதில்லை. மருத்துவமனைக்குக் கொடுப்போம். அப்போதுதான் பல நோயாளிகள் பலன் அடைவார்கள். ரொம்பவும் தவிர்க்க முடியாதபோது, விதிகளை மீறி உதவுவோம்.

நான் காகிதங்களை எல்லாம் பார்த்தேன். விண்ணப்பமும், கான்ஸர்தான் என்று டாக்டர் கொடுத்த சீட்டும் தவிர வேறு எதுவுமில்லை. இதை வைத்துக்கொண்டு எப்படி நிதி உதவி



**அரியர்ஸ்**

"ஒரு பேச்சுக்குக் கேட்கிறேன் டாக்டர், ஒரு நாள் பூராவும் பேஷண்ட்டே வராமப் போயிட்டா என்ன பண்ணுவீங்க...?"

"எம்.பி.பி.எஸ். அரியர்ஸ் பேப்பருக்குப் படிக்கத் தொடங்குவேன்...!"

- நாமக்கல் பாலு

## பாட்டில்

''ஏட்டு அய்யா... பக்கத்துத் தெருவிலே சாராயம் காய்ச்சுறாங்க. உடனே வாங்க...''

''இரு... பாட்டில் எடுத்துக்கிட்டு வர்றேன்.''

- எஸ்.மோகன்



செய்வது? 'மருத்துவமனையில் இருந்த சான்றிதழ், பரிசோதனைச் சாலை அறிக்கை, ஆபரேஷனுக்கு ஆகும் செலவு குறித்த மதிப்பீடு, மருத்துவ மனையில் அவருக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அடையாள எண் எல்லாம் தேவை' என்றேன். 'ஒரு மருத்துவரின் உதவியோடு நான் அவற்றைச் சரிபார்க்க வேண்டும்' என்றேன்.

ராமப்பா சற்று யோசனை செய்து விட்டு, "சரி, நான் நாளை வருகிறேன்!" என்று போய்விட்டார்.

அடுத்த நாளே ராமப்பா ஒரு குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்தார். குழந்தை மெலிந்திருந்தது. அதன் வலி முகத்திலேயே தெரிந்தது. வயிறு வீங்கிப் போய், ரத்த சோகையுடன் பரிதாபமாக இருந்தது குழந்தை. பார்ப்பதற்கே கஷ்டமாக இருந்தது.

குரூரமான உண்மை நிலையை நேருக்கு நேர் பார்ப்பது சிரமமான விஷயம். ராமப்பா தன் குழந்தையை அந்த நிலைமையில் அலுவலகத்துக்கே கொண்டு வந்ததில் எனக்கு வருத்தம்தான்.

"ஏன் இப்படி இந்தக் குழந்தையை அவஸ்தைக்கு உள்ளாக்குகிறாய்? நான் குழந்தையை எடுத்துவரச் சொன்னேனா? மருத்துவ அறிக்கைகளைத்தானே பார்க்க வேண்டும் என்றேன்?" என்று கோபத்துடன் இரைந்தேன்.

"அம்மா, அந்தக் காகிதங்கள் எல்லாம் கைக்குவர இன்னும் இரண்டு மூன்று நாட்களாகும். அதனால்தான் சாட்சிக்காகக் குழந்தையையே கொண்டு வந்தேன்!"

எனக்குக் குழந்தை சோம்நாத்தைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. ரூ.25,000க்கு ஒரு காசோலை எழுதி அந்த ராமப்பாவிடம் கொடுத்தேன். "அம்மா, நீங்கள் இத்துடன் ஒரு கடிதமும் கொடுத்தால், வேறு பலரையும் நான் நன்கொடை கேட்க உதவியாக இருக்கும். ஏனென்றால் மொத்த மருத்துவச் செலவு இரண்டு லட்ச ரூபாய். உங்கள் கடிதத்துக்கு மதிப்பும் கொடுப்பார்கள்.." என்றார் ராமப்பா.

அதில் தவறில்லை என்று எண்ணி, அப்படியே ஒரு கடிதம் கொடுத்தேன்.

ராமப்பா என்னை நன்றியோடு வாழ்த்திவிட்டு, குழந்தையை மருத்துவ மனை ஒன்றில் சேர்ப்பதாகச் சொன்னார். அறுவை சிகிச்சை முடிந்ததும் உடனே வந்து தெரிவிப்பதாகச் சொன்னார்.

**நா**ட்கள் கடந்தன. நான் ராமப்பாவை மறந்தே போனேன். கிட்டத்தட்ட ஒரு வருடத்துக்குப் பிறகு, ஆடிட் நடந்தபோது ராமப்பாவின் கேஸ் நினைவுக்கு வந்தது. அவர் என்னைக் காணவும் வரவில்லை. எந்தக் காகிதமோ, ரசீதோ அனுப்பி வைக்கவும் இல்லை.

எனக்குத் தெரிந்த கான்ஸர் மருத்துவமனையைக் கூப்பிட்டு, 'சோம்நாத் என்ற நோயாளியின் ஆபரேஷன் பற்றி ஏதாவது தெரியுமா' என்று கேட்டேன். அவர்கள் பதிவேடுகளைப் பார்த்துவிட்டு, அந்த வருடத்தில் சோம்நாத் என்று யாருக்கும் ஆபரேஷன் செய்யவே இல்லை என்றார்கள்.

(பேசுவோம்)

# வார்த்தைகள்

## 1 கனிமொழி

எப்போதும் போல்
மெல்ல உதிர்கின்றன,
உன் வார்த்தைகள்.

அந்தரத்தில் கட்டமைக்கப்பட்ட
சிறகுகளைப் போன்ற சொற்கள்
ஏகாந்த இழைகளில் நெய்த
வண்ணம் ஏற்றிய
வாக்கியங்கள்,
நிஜங்களையும் கனவுகளையும்
ஒன்றாய்க் கோத்து
மிதக்கின்றன,
பிரமிக்கும் ஜாலங்கள்
செய்தபடி.
வாயில்களாய்
வழித்தடங்களாய்
சரணாலயங்களாய்...
கரம் நீண்டு
தொட்டுவிடத் துடிக்கிறது,
ஸ்பரிசம் தாண்டிய
உலவும் உன் சொற்களை.
மொட்டவிழ்ந்து மலரும்
பூக்களைப்போல் இதழ்.
பிரிந்து உதிர்கின்றன,
ஓசையற்ற காற்றில்
அலைந்தபடி, விழும்
கனமற்ற அட்சரங்கள்.
உன் வார்த்தைகள்
பிறப்பது உன்னில் இருந்தல்ல
என் போதாமைகளின்
இருண்ட ஆழங்களில்.

சூன்யத்தின் தாளாத
வெறுமை கிழித்து
மீண்டும் யாசிக்கிறேன்,
மீளாத துயிலுக்காக.
இமை மூடி வருடும்
நிஜம் தொடாது மிதக்கும்
வண்ணம் தோய்ந்த
உன் வார்த்தைகளுக்காக...
சோர்வின் விளிம்பில் நின்று...



படம்: ஸ்ரீஹரி

இது புதுசு

ஆனந்த்

# முதியோர் உள்ளம்



"ஆட்டோ, மயிலாப்பூர் வருமா?" சங்கர் கேட்டான், அருகில் அவனது அப்பா ராமநாதன்.

"மயிலாப்பூர்ல...?"

"ம்... வடக்கு மாட வீதில ஔவை முதியோர் இல்லம் போகணும்...?"

"அம்பது ரூபா கொடு சார்"

"சரி" என்று சொல்லிவிட்டு, தன் அப்பாவை கவனமாகப் பார்த்து ஆட்டோவினுள் அமரச் செய்தான் சங்கர்.

வண்டி புறப்பட்ட சிறிது நேரம் கழித்து, மெல்ல மௌனத்தைக் கலைத்தான் சங்கர்.

"அப்பா, இது தேவையா...?"

ராமநாதன் பதில் பேசாமல் இருந்தார்.

"உங்களத்தாம்பா கேக்கறேன். பாக்கறவங்க என்ன நினைப்பாங்க? என்னவெல்லாம் பேசுவாங்க...? இது நீங்களா எடுத்த முடிவுன்னு நான் போய் ஒவ்வொருத்தர் கிட்டயும் சொல்லவா முடியும்? ப்ளீஸ்... இப்படியே திரும்பலாம்பா" சங்கர் கெஞ்சும் தொனியில் கேட்டான்.

"இல்ல சங்கரா. இது ரொம்ப நாளா யோசிச்சு எடுத்த முடிவு! மனுஷன் இங்கற நேரம் போக, மத்த நேரத்துல யாருக்கும் பாரமா இருக்கறது தப்பு! எப்பவும், நாம நம்மைச் சுத்தியிருக்கறவங்களுக்கு பயனுள்ள வகையில வாழணும்... சொல்லப் போனா... இந்த முடிவ எப்பவோ எடுத்திருக்கணும்?"

ராமநாதன் தீர்மானமாகச் சொன்னார்! அதற்குமேல் சங்கர் எதுவும் பேசவில்லை.

**ஔ**வை முதியோர் இல்லத்தை அடைந்ததும் சங்கர், தன் அப்பாவை அழைத்துக்கொண்டு, அதன் மேலாளர் சுப்பிரமணியிடம் சென்றான்.

"சார், இங்க ஆபீஸ்ல மேனேஜர் வேலைக்கு ஆள் தேவைன்னு விளம்பரம் கொடுத்திருந்தீங்களே... இதோ எங்கப்பா, ஃப்ரீயா சர்வீஸ் பண்ணணும்னு ஆசைப்படறார் சார்..?" பணிவாகச் சொன்னான்.



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 17 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்
நல்லாசியுடன்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா

A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

இது புதுசு

# “அப்பாவுக்குப் புள்ள தப்பாம...”

**கோ**வை பீளமேடு விமான நிலையத்துக்கு மிக அருகில் இருக்கிறது ஜி.கே.ஆர் நகர் குடியிருப்பு. அதிகாலை மூன்று முப்பதிலிருந்து இரவு எட்டு முப்பது வரைக்குமாக, ஒரு நாளைக்கு எட்டு விமானங்கள் அப் பகுதி வழியே தாழ்வாகப் பறந்து செல்கின்றன.

கோ. குணசேகரன் - ராதாமணி தம்பதி இங்குதான் பல ஆண்டுகளாக வசித்து வருகின்றனர். 'வாரம் ஒரு குடும்பம்' என்கிற புதிய பகுதியை இந்த இதழிலிருந்து துவக்கி வைப்பவர்கள் இவர்கள்தான்.

“வாங்க வாங்க” என்று நம்மை வாயார வீட்டிற்குள் அழைத்து முதலில் தாகம் தீர்க்க தண்ணீர் (அதுவும் சுவையான சிறுவாணித் தண்ணீர்) கொடுத்தபடி குணசேகரன் பேச ஆரம்பிக்க, கதவோரத்தில் நின்று வேடிக்கை பார்த்தனர் ராதாமணியும் அவரது மகள் மலர்விழியும்.

“ரொம்பப் பெருமையா இருக்குங்க. நாங்க மட்டுமில்லாம எங்க பொண்ணையும் தவறாம கல்கி படிக்கச் சொல்வோம்...” என்று நம்மைக் கண்ட மாத்திரத்தில் கல்கியின் பெருமைகளை வாசிக்கத் துவங்கினார்.

“சார், நான் பேசட்டுமா?” என்று துடுக்காக முன்வந்தார் மலர்விழி. ப்ளஸ் டூவில் 1092 மதிப்பெண்கள் எடுத்த படிப்புப் புலி.

“எங்கப்பாம்மா ரெண்டு பேரும் கெமிஸ்ட்ரி டிகிரி ஹோல்டர்ஸ். இவங்களுக்கு 1986 நவம்பர் 14ம் தேதி, கொழந்தைங்க தினத்தன்னைக்குத்தான் கல்யாணம் நடந்துச்சு” என்று குதூகலிக்க, “கண்ணு, சும்மாரு” என்று மகளை அதட்டினார் அம்மா. பிறகு அவரே சங்கோஜப்பட்டுக் கொண்டு பேசத் தொடங்கினார்.

“எங்க கல்யாணத்தன்னைக்கு நான் இருபத்தாறு வயசுக் கொழந்தை. அவரு முப்பத்தைஞ்சு வயசுக் கொழந்தை. என்ன வயசானாலும் எனக்கு அவரும், அவருக்கு நானும் கொழந்தைங்கதான். எங்க ரெண்டு பேருக்கும் பொதுவா இவ” என்று கூற “ஆகா... ரொமான்ஸை ஆரம்பிச்சுட்டாங்கப்பா” என்று மலர்விழி தன்



தாய் - தந்தையைக் கலாய்க்க ஆரம்பிக்க, கொஞ்ச நேரத்திற்கு அங்கு சிரிப் பலை.

" ப்ளஸ் டூ எக்ஸாம் ரிசல்ட் வந்தன்னைக்கு நான் அப்பாவை 'க்ரீச்'னு நல்லா



கிள்ளினேன். ஏன் தெரியுங்களா? 1969ல அப்பா எஸ்.எஸ்.எல்.சி எக்ஸாம்ல கணக்குல சதத்தை மூணு மார்க்குல கோட்டை விட்டாரு. நானும் அப்பாவுக்குப் புள்ள தப்பாம ப்ளஸ் டூ கணக்குப் பாடத்துல சென்டமுக்கு மூணு மார்க் மிஸ் பண்ணிட்டேனே" என்று குறும்பு கொப்பளிக்கப் பேசினார் மலர்விழி.

பிறகு நம்மை அழைத்துக் கொண்டு வீட்டைச் சுற்றிக் காட்டினார் குணசேகரன். தற்பொழுது சேலம் சுங்கத் தடுப்பு அலுவலக மேற்பார்வையாளராகப் பணிபுரிந்து கொண்டிருக்கிறார்.

மாடியிலிருந்து கீழிறங்கி வந்தால், தன் மகளை இழுத்து வைத்து தலை வாரிப் பின்னலிட்டுக் கொண்டிருந்தார் ராதாமணி. தாய்க்கும் மகளுக்குமான அந்நியோன்யத்தை அதிகரிக்கும் அற்புதத் தருணமல்லவா இது! ரெடி... ஜூட்... க்ளிக்...

**வி**மான நிலைய அஞ்சலகத்தில் பணிபுரியும் ராதாமணி தொடர்ந்தார்... "தமிழ்னா எனக்கு ரொம்ப இஷ்டமுங்க (மகளின் பெயரிலேயே தெரிகிறதே). தரமான எழுத்துகள் எதையும் விட மாட்டேன். தி. ஜானகிராமன், லா.ச.ரா, கல்கி, ஜெயகாந்தன் புத்தகங்கள் என்கிட்ட நிறைய இருக்கு. 'கல்கி' இதழைப் பொறுத்தவரைக்கும் எல்லோருக்கும் முன்னாடி ஒரு வாட்டி. அப்புறம் மெதுவா ஞாயிறன்னைக்கு அசை போட்டுப் படிக்கிறதுன்னு ரெண்டு தடவை படிச்சாத்தான் மனசுக்குத் திருப்தி" என்றார்.

இறுதியாக அவர்களுக்குள் நடத்திய சர்வேயில், ஒவ்வொருவரும் கல்கியில் விரும்பிப் படிப்பவை...!

குணசேகரன் - தராசு பதில்கள்

ராதாமணி - சுஜாதாவின் 'உன்னம் துறந்தவன்' தொடர்

மலர்விழி - இளமை கல்கி

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

“அண்ணாத்தே... பேப்பர் பாத்தியா... இந்தம்மா இப்பிடியே DA, BAன்னு ஒண்ணு ஒண்ணா அள்ளிவுட்டுக்கிட்டே போச்சுன்னு வச்சுக்க... வர்ற எலக்ஷன்ல நம்ம டப்பா டான்ஸ் ஆடிடும்.”

“டேய்... அதுக்கு நீ ஏண்டா ரொம்ப அலுத்துக்குற... கடைசி நேரத்துல நம்ம தலைவரு சும்மா பின்னப் போறாரு பாரு..”

“ஆமாமா... இல்லன்னா நம்மளப் பின்னிடும் அந்தம்மா, தெரியும்ல”

- இது யாரு விட்ட டயலாக்கா இருக்கும்னு கேட்கறீங்களா... அதை நான் சொல்லித்தான் தெரிஞ்சுக்கணுமா என்ன... இருந்தாலும் சொல்றேன்... கொஞ்ச நாளா கலைஞருக்கு எலக்ஷன் ஃபீவரு ஏகத்துக்கும் எகிறியிருக்கு போல... எல்லா மாவட்டத்து கட்சிக்காரங்களையும் தனித்தனியா அறிவாலயத்துக்குக் கூட்டியாந்து பின்னிப் பெடலெடுக்க ஆரம்பிச்சிருக்காறப்பு... அந்தக் கூட்டத்துல கலந்துக்க வந்த ரெண்டு உபிங்க கடலையைக் கொறிச்சிக்கிட்டே உட்ட டயலாக்கு தான் மேல இருக்குறது.

கையில முரசொலியையும், தினகரனையும் சுருட்டிக்கிட்டு நேரா அறிவாலயத்துக்குள்ள போயி, நாலு ரவுண்டு வந்து மேட்டர் தேத்த ஆரம்பிச்சோம். “இந்தக் கூட்டத்துல கலந்துக்கறவங்க பேசற தொனிய வச்சுத்தான் நாம எத்தனை சீட்டுல நிக்குறது, சீட்டு கெடைக்கலைன்னா யாரு அம்மாகிட்ட போவாங்க, யாரு விஜயகாந்துகிட்ட போவ ரெடியா இருக்கறது, யாரு எதிர்த்து நிப்பாங்க எல்லாத்தையும் கலைஞரு தீர்மானம் பண்ணுவாரு... அதனாலதான் ரொம்ப பேரு கையில பொட்டி, அதுக்குள்ள பெட்டிஷன்னு இங்க வந்திருக்காங்க. சில பேரு கொண்டு வந்ததை, காட்ட வேண்டியவங்ககிட்ட காட்டாமலே கொண்டு போயிட்டாங்க. ஏன்னா, ஒருவேளை தலைவரு அதைக் கண்டுக்காம விட்டுட்டாருன்னா








## விசிட்

# தலைவருக்கு பிடிச்ச 'தீ'!

நாளை பின்னால அவங்க மூஞ்சில முழிக்க வேணாமா..." என்று யதார்த்த மாகக் கேட்டுவிட்டு நகர்ந்தாரு ஒரு உ.பி. இவரும் பெட்டி - பெட்டிஷனோடு, திரு வல்லிகேணில இருக்குற மவ வீட்ல தங்கியிருக்காராம்.

உச்சி வெயில் மண்டையைப் பிளக்கற நேரத்துல பார்க்குல ஒரு துண்டை விரிச்சு போட்டுப் படுத்துக் கிட்டு இருந்தாரு ஒரு உ.பி. "ஏம் பெரிசு... இந்த வைகோ கட்சிக்காரங்க கொஞ்ச நாளா ஓவரா பேசறாப்ல தெரியுது"ன்னு மெல்ல தூண்டில் போட்டா,

"யாரு... இந்த கோபால்சாமி ஆளுங்க தானே"ன்னுட்டு நம்ம தூண்டில்ல சிக்கிக்கிட்டாரு... "இந்தப் பசங்க சேது சமுத்திரத் திட்டம் C/o கோபால்சாமின்னு போடணும்னு நினைக்கிறாங்க போல... இப்பல்லாம் மீட்டிங்குக்கு மீட்டிங்கு சாடை பேசறாங்க... குட்டி குரைச்சி நாய் தலைல விடியும்னு சொல்வாங்க. அது மாதிரி வெவரம் தெரியாம இவங்க பேச, கடைசில கோபால்சாமிக்குத்தான் எடைஞ்சலு"ன்னு படபடன்னு பொரிய, செக்யூரிட்டி வந்து 'எந்திரி... எந்திரி... இங்கல்லாம் படுக்கக் கூடாது'ன்னு விரட்ட, அங்கிருந்து நேரா கலைஞர் கார் நிக்கற சந்துக்கு வந்து நின்னுக்கிட்டோம்.

நம்மளக் கடந்து போன ரெண்டு பேரு கமுக்கமா பேசிக்கிட்டத கவனிச்சோம். விஷயம் இதுதான்... இந்த மாவட்ட ஆலோசனை கூட்டம்லாம் முடிஞ்ச பிறகு, கட்சிக்குள்ள களை எடுக்கற அத்தியாயம் ஆரம்பிக்குமாம்.

"ஏண்ணே... இதுல பாதிக்கப்படறது மாவட்டத் தலைங்களா... இல்ல.. வட்டம்... நகரம்... மாதிரி ஆளுங்களா"ன்னு ஒண்ணுந் தெரியாத பாப்பா மாதிரி முகத்தை வச்சிக்கிட்டு, பக்கத்துல நின்ன மீசைக்கார அண்ணாச்சிகிட்ட கேட்க,

"யாரா இருந்தாலும் அவங்க கேஷ் பார்ட்டியா இருந்தா டேஞ்சர் ஜாஸ்தியா இருக்காது. அப்படி இல்லாதவங்களுக்கு கொஞ்சம் செரமந்தான் தம்பி. ஏன்னா, தலைவருக்கு 'நிதி'ன்னா அம்புட்டு இஷ்டம்" என்றபடி அண்ணன் நகர, சற்று முன்னர் விழுங்கிய அறிவாலய இஞ்சி டீ நம் நெஞ்சில் கரித்தது.

**- ஒற்றன்**



அட்டை மற்றும் படம்: ஸ்ரீஹரி

# பாலாவுக்கு குட்பை!

பள்ளிக்குச் செல்லும் பெண் போல இருக்கிறார் காவ்யா. முன்பு கே. பாலசந்தரின் ‘சஹானா’, இப்போது ‘எங்கிருந்தோ வந்தாள்’ சீரியலின் நாயகி.

“கே.பி சார் பேனர்ல நடிக்கறது ரொம்பப் பெருமையான விஷயம். உலகத்துலயே நான்தான் அதிர்ஷ்டசாலின்னு அடிக்கடி நினைச்சுப்பேன்” என்று சிரிக்கிறார்.

“கே.பி. பேனருக்கு மட்டும்தான் உங்கள் கால்ஷீட்டா... மத்தவங்களுக்கு இல்லையா...” என்றால், பதறி மறுக்கிறார்.

“வெளி பேனர்ல நடிக்கறதுல எனக்கு ஒண்ணும் கஷ்டமில்ல... ஆனா ‘சஹானா’, ‘எங்கிருந்தோ வந்தாள்’ ரெண்டுமே ஹீரோயின் பேஸ்டு சப்ஜெக்ட்ஸ். எனக்கு ரொம்ப யுனிக்கான கேரக்டர். இப்படி நல்லா நடிக்கறதுக்கு ஸ்கோப் உள்ள ரோல் கிடைச்சா தாராளமா நடிப்பேன். எனக்கு பரத நாட்டியம், படிப்பு ரெண்டும், ரெண்டு கண்கள் மாதிரி. இப்போ சீரியல்ஸ் பண்றதால, ரெண்டுத்துக்கும் முன்ன மாதிரி அதிக டைம் ஒதுக்க முடியறதில்ல” என்று ‘உச்’ கொட்டும் காவ்யாவை, ஷாட் முடிந்தவுடன் “நீ போய்ப் படிம்மா...” என்று அனுப்பி விடுவாராம் கே.பி.

இவரது போட்டோக்களைப் பார்த்துவிட்டு, பிதாமகனுக்காக அணுகிய பாலா, “நீ இன்னும் கொஞ்சம் குண்டாகணும்மா” என்று சொல்லிவிட்டாராம். இவரும் “அப்பாடா... ஆளைவிடுங்க நான் போய்ப் படிக்கிறேன்” என்று சந்தோஷமாக குட்பை சொல்லிவிட்டாராம். தற்போது கேபியின் பழைய ஹீரோயின் கேரக்டர்களை உன்னிப்பாகக் கவனித்து, ஹோம் ஒர்க் செய்து வருகிறார் காவ்யா.... எதற்காக? கோடம்பாக்கத்துக்குள் குதிக்கத்தான். ○

# சேனல்

☺ எப்போதும் ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு ஆட்டோவிலேயே வருகிறாராம் விஷ்வா.



• மாறின நேரம்!



• கல்லூரி கலக்கல்!

# பிட்டா பிடிங்க!



• கதவு தட்டும் வாய்ப்பு!

☺ சன் டீவியின் 'கோலங்கள்', இரவு ஏழரை மணி ஸ்லாட்டிலிருந்து ஒன்பது மணிக்கு மாறிவிட்டதன் காரணம், முகூர்த்தத்திற்கு சரியான ரெஸ்பான்ஸ் இல்லை என்பதால் தானாம்.

☺ காமெடி ஸ்கிரிப்ட் எழுதுவதில் சூப்பர் டென் ஆர்த்திக்கு அலாதிப் பிரியம். தமது காமெடி ஸ்கிரிப்ட்டுகளை நாடகமாக்கி, கல்லூரி விழாக்களில் கலக்கி வருகிறார்.

☺ சின்னத்திரையில் வில்லி கேரக்டர்களில் தேவிப்ரியா வெளுத்து வாங்குவதால், வெள்ளித்திரை வாய்ப்புகளும் வந்து கதவைத் தட்டுகின்றனவாம்!

☺ ஏ.வி.எம். பேனருக்கு வசனம் எழுதுபவர்கள் மிகுந்த கவனத்துடன் செயல்படுகிறார்கள். எதிர்மறையான, நடைமுறை வாழ்க்கைக்கு உதவாத வசனங்கள் என்றால் உடனே 'தடா'தானாம்.

தொகுப்பு:
**கோகிலா**

## காணவில்லை... தேட வேண்டாம்!



• ஜேம்ஸ் வசந்தன்



• யூகி சேது



• ஜீவா

## குட்டு!



**ஜெ**யா டீவி 'காமெடி பஜாரி'ல், ஜேக்கப் மற்றும் மாறனின் வெத்து வேட்டு ஜோக்குகள் வாராவாரம் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. சிரிப்பைவிட கொட்டாவிதான் வருகிறது.

## ஷொட்டு!



**'சொ**ர்க்கம்' சீரியலில் மௌனிகாவின் நடிப்பு நாளுக்கு நாள் மெருகேறி வருகிறது. இதனால் சீரியலும் பிக்-அப் ஆவது ஆரோக்கியமான விஷயம்.

# அமரர் கல்கி





**உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் உள்ள நமது ஆயிரக்கணக்கான நேயர்களில், பலர் என்றாவது ஒருநாள் சென்னைப் பட்டணத்திற்கு வந்து பார்க்கவேண்டுமென்னும் எண்ணங் கொண்டவர்களாயிருக்கலாம். அத்தகையோரின் நன்மைக்காக இன்று இவ்வகராதியை வெளியிடுகிறோம்.**

**இல்லறம்:-** இந்த அறம் சென்னையில் மிக மேலான முறையில் நடந்து வருகிறது. பெண்டாட்டியின் மீது மண்ணெண்ணெய் ஊற்றிக் கொளுத்தும் உத்தமக் கணவர்களையும், புருஷனை விஷமிட்டுக் கொல்லும் பதிவிரதா சிரோமணிகளையும் சென்னையில் காணலாம்.

**ஊமை:-** சென்னை சட்ட சபை அங்கத்தினரில் 100க்கு 70 பேர் இந்த இனத்தைச் சேர்ந்தவர்களென்று சொல்லப் படுகிறது.

**ஏகாதசி:-** சென்னை நகரின் வக்கீல்களிடமும், வைத்தியர்களிடமும் ஒருமுறை சிக்கிக் கொண்டவர்கள், பின்னர் தங்கள் வாழ்நாள் முழுவதும் தினந்தோறும் மேற்படி விரதம் அனுஷ்டிக்க வேண்டி வரும். ஒரு குழி நிலமாவது, ஒரு தம்பிடிக் காசாவது பாக்கியிருக்கும் வரையில் அவ்வக்கீல்களும் வைத்தியர்களும் உம்மை விடமாட்டார்கள்.

**ஒன்று:-** சென்னைப் பட்டணத்திலுள்ள அடகுக் கடைகளிலும், ஈட்டிக்காரர்களிடமும் கடன் வாங்கியவர்கள் தப்பிப் பிழைப்பதற்கு வழி ஒன்றே ஒன்றுதான். கழுத்தில் கல்லைக் கட்டிக் கொண்டு வங்காள விரிகுடாக் கடலில் விழுவதுதான் அந்த வழி.

**ஓடு:-** மௌண்ட் ரோட்டிலுள்ள கடைகளுக்குள் ஒருவன் தன் மனைவியை அழைத்துக் கொண்டு புகுந்து விட்டால், வெளியே வந்ததும் கையில் எடுத்துக்கொள்ள வேண்டியது திருவோடு.

**நகரசபை:-** எழும்பூர் ஸ்டேஷனில் இறங்கி ஜார்ஜ் டவுனுக்குப் போகும் போது, வழியில் ஒரு பெரிய வெள்ளைக் கட்டடம் காணப்படும். அந்தக் கட்டடத்தில் போடப்படும் கூச்சலையும், நடக்கும் 'கலாட்டா'வையும்

# சென்னை அகராதி!

பார்த்து, அது மீன் கடையென்று எண்ணிவிட வேண்டாம். அதுதான் நகரசபை மண்டபம் என்றும், நகர சபைப் பிரதிநிதிகள் அப்போது ஏதோ முக்கியமான விஷயத்தைப் பற்றி வாதிடுகிறார்கள் என்றும் அறிந்து கொள்க.

**நாகரிகம்:-** சென்னையில் நாகரிகம் வளர்ந்து வருகிறதென்பதைப் பற்றி அபிப்பிராய பேதமே இருக்க முடியாது. சாராயக் கடை, சுருட்டுக் கடைகளின் வளர்ச்சியையும், கொசுக்களின் பெருக்கத்தையும் கொண்டு சென்னையின் நாகரிகத்தை ஒருவாறு அளந்தறியலாம்.



**பணம்:-** இந்த வஸ்துவை வைத்துக் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் தவிப்பவர்கள், அடுத்த ரயிலில் சென்னைக்குப் புறப்படுவார்களாக.

**பால்:-** வெளியூர்களில் இதற்குத் தண்ணீர் என்று பெயர். சென்னையில் 'பால்' என்பதாக வழங்கப்படுகிறது.

**யமன்:-** இந்த ஆசாமிக்குச் சென்னை நகரில் அதிக வேலை கிடையாது. பெயர் பெற்ற ஆங்கிலேய டாக்டர்களும், அரசாங்க மெடல்கள் பெற்ற ஆயுர்வேத வைத்தியர்களும், கேஸுக்கு ஆயிரம் ரூபாய் வாங்கும் யுனானி ஹக்கீம்களும், மோட்டார் வண்டிகளும், கொசுக்களும் சென்னையில் ஏராளமாய் இருப்பதால், யமனுடைய வேலை பெரிதும் மிச்சப்பட்டு வருகிறது.

**யார்?:-** சென்னை நகரில் உள்ள உமது அருமை நண்பரையோ, உற்ற பந்துவையோ ஒரு வேளைச் சாப்பாட்டுக்காக நீர் தேடிச் சென்றால், அவர் உம்மைப் பார்த்துக் கேட்கும் கேள்வி 'நீர் யார்?'

**வாடகை:-** கண்ணியமான அபிப்பிராய பேதம் ஏற்படுவதற்கு உதாரணமாய் விளங்குவது. சென்னையில் வீடுகளின் சொந்தக்காரர்களைக் கேட்டால் 'வாடகை மிகவும் குறைவு' என்று சொல்லுவார்கள்; குடியிருப்பவர்களைக் கேட்டால் 'ஐயோ! வீட்டு வாடகையா? அநியாய அதிகம்!' என்பார்கள். வண்டி வாடகை விஷயத்திலும் இது பொருந்தும்.

**• அதிர்ஷ்ட கவசத்திலிருந்து...**
**வானதி பதிப்பகம்**

## 40 அந்த நாள் ஞாபகம் திரையுலக நினைவுகள்

# நான் கொண்ட

**நா**ன் தயாரிப்பு நிர்வாகியான பிறகு எங்கள் நிறுவனத்தில் தயாரிக்கப்பட்ட முதல் படமான மாமியார் மெச்சிய மருமகள், 23.1.1959ல் வெளியானது. ஆனால் அது வெற்றிப் படமாக அமையவில்லை. இதில் எனக்கு மிகவும் வருத்தம்தான். இந்தத் தோல்வியைப் பழிவாங்கும் விதத்தில், பின்னாளில் இதே மாதிரியான ஒரு சப்ஜெக்டை வைத்து எடுத்து வெற்றி காண வேண்டும் என்று அப்போதே மனதுக்குள் உறுதி எடுத்துக் கொண்டேன். ஒரு வைராக்கியம் பிறந்தது.

'பாட்டி சொல்லைத் தட்டாதே' மூலம் அந்த வைராக்கியத்தை நான் நிறைவேற்றிக் கொண்டேன் என்றால் தப்பில்லை.

ஒருமுறை கங்கை அமரன் எங்களுக்குப் படம் ஒன்று செய்துதர வேண்டும் என்று விரும்பி, வாய்ப்புக் கேட்டார்.

''மாமியார் மெச்சிய மருமகள்' தோல்விக்கு ஈடுகட்டும் வகையில் ஒரு படம் எடுக்க வேண்டும்'' என்று என் விருப்பத்தைச் சொன்னேன்.

அமரன் டைரக்ட் செய்வதாகவும், இளையராஜா இசையமைப்பதாகவும் முதலில் திட்டமிருந்தது. ஆனால் அது சரியாக வரவில்லை.

'சித்ராலயா' கோபு, 'பட்டம் பறக்குது' என்ற நாடகத்தை சென்னை தொலைக்காட்சிக்கு எழுதிக் கொடுத்து, அது நிராகரிக்கப்பட்டிருந்தது. அந்தக் கதைதான் 'பாட்டி சொல்லைத் தட்டாதே' என்று வெள்ளித் திரை கண்டது. ஆங்கிலத்தில் வெளிவந்த 'லவ் பக்' என்ற படம்தான் இந்தக் கதைக்கு இன்ஸ்பிரேஷன். மாமியார்-மருமகள் உறவை வைதது, 'மாமியார் மெச்சிய மருமகள்' படத்தை எடுத்தது போல, இதில் பாட்டி-பேரன் சென்டிமென்ட் நன்றாக வொர்க் அவுட் ஆனது.

என் பாட்டி - அம்மாவின் அம்மா எனக்கு ரொம்பச் செல்லம். நான் அவருக்கு அதற்குமேல் செல்லம்.

பாட்டிக்கு பேரனிடம் அன்பு இருக்கும். இது தெரிந்த உண்மை. அந்த உண்மையை நான் பெருமளவில் உணர்ந்திருந்தேன்.

என் பாட்டி எங்களுக்குக் கதை சொன்னது, சோறு ஊட்டியது எல்லாம் இப்போது நினைத்தாலும் இனிக்கும் நினைவுகள்.

காலையில் எழுந்தவுடன் நான் மாடிப் படிகளில் இறங்கி வரும்போது, என் காலடி ஒலி கேட்டு அது நான்தான் என்று தெரிந்துகொண்டு, ''ஹாய் சரவணா, குட்மார்னிங்'' என்பார் என்





• 'பாட்டி சொல்லைத் தட்டாதே'

# வைராக்கியம்!

பாட்டி. அதே போல என் மகன் குகன் அவரை நெருங்கும்போதே "குகன்... குட்மார்னிங்" என்பார். அப்படி ஓர் ஆற்றல் அவருக்கு அமைந்திருந்தது. என் பாட்டி என் அம்மா வீட்டுக்கோ, என் மாமா வீட்டுக்கோ போகவில்லை. கடைசி வரை என் வீட்டிலேயே இருந்தார்கள். என் மீது பாசத்தை அப்படிப் பொழிந்தார்கள்.

'பாட்டி சொல்லைத் தட்டாதே' படத்தில் இந்தப் பாசத்தின் வெளிப்பாடு இருக்கும்.

அந்தப் படத்தில் ஒரு வினோதமான காரைப் பயன்படுத்தினோம். ஓடிக் கொண்டிருக்கும்போதே இரண்டாகப் பிரிந்து, இரண்டும் தனித்தனியே இயங்குவது மாதிரி அமைத்தோம். இந்தத் தொழில்நுட்பம் முழுவதும் என் மகன் குகனுடையதுதான். வோல்ஸ் வேகன் கார் ஒன்றை வாங்கி, அதை நடுவில் இரண்டாகப் பிரித்து குகன் உருவாக்கினார். வோல்ஸ் வேகனில் பின்பக்கம் என்ஜின் இருக்கும். அதை அப்படியே விட்டுவிட்டு, முன் பக்கம் ஓர் ஆட்டோ ரிக்ஷா என்ஜினை வைத்து அட்டகாசமாக அந்த கார் உருவாக்கப்பட்டது. இதற்கான முழுப் பெருமையும் குகனையே சேரும். சூப்பர் கார் என்றே அந்த காருக்குப் பெயர் வந்துவிட்டது.

படத்தில் மனோரமா சண்டை போடுவதாக ஒரு காட்சி வைத்தோம். ஆனால் அந்தக் காட்சியில் நடிக்க அவர் எளிதில் சம்மதிக்கவில்லை. 'சண்டைக் காட்சியில் நடிக்க வேண்டாம் ஆச்சி' என்று எங்கள் துறையிலேயே பலர் பலவிதமாக மனோரமாவை டிஸ்கரேஜ் செய்து வந்தார்கள். அதுதான் அவர் தயக்கத்துக்குக் காரணம். ஆச்சியே என்னிடம் வந்து "தம்பி... நான் ஃபைட் பண்ணா நல்லா இருக்குமா?" என்று கேட்டார்.

"உங்களால் பண்ண முடியுமில்லையா?" என்று நான் கேட்டேன்.

**ஏவி.எம்.சரவணன்**

"ஏன் பண்ணாம? நான் பண்ணு வேன்" என்றார் நம்பிக்கையுடன்.

"பின் என்ன? நீங்க ஃபைட் பண்றீங்க" என்றேன்.

மனோரமா சண்டைக் காட்சியில் வெளுத்துக் கட்டினார். காரும், ஆச்சியின் அட்டகாசமான ஃபைட்டிங் சீன்களும் அனைவரையும் கவர்ந்தன.

கார் இரண்டாகப் பிளக்கும் காட்சியிலிருந்தும், ஆச்சி, குச்சி சுற்றும் காட்சியிலிருந்தும் பத்தே பத்து வினாடிகள் வருமாறு நாங்கள் தயாரித்து வெளியிட்ட டி.வி. விளம்பரம், பெரியவர்கள், சிறியவர்களிடையே பெரும் ஆர்வத்தை ஏற்படுத்தியது.

படம் பெருவெற்றி பெற்று, வெள்ளி விழா கண்டது.

விழாவில் கலந்துகொண்டு கலைஞர் அவர்கள் சிறப்பித்தார். உரையாற்றுகையில் அவர் சொன்னார்: "நான் ஒருமுறை வெளியூர் சென்றிருந்தபோது, ஓர் இடத்தில் மக்கள் கும்பலாகச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். அந்த இடமே பரபரப்பாக இருந்தது. வேறு கட்சியின் கூட்டமோ என்று எண்ணி 'எந்தக் கட்சி' என்று கேட்டேன். விசாரித்தபோது 'பாட்டி சொல்லைத் தட்டாதே சூப்பர் கார், ஷோவுக்காகக் கொண்டு வரப்பட்டு, அங்கே நிற்க வைக்கப்பட்டிருக்கிறது' என்று சொன்னார்கள்."

'பாட்டி சொல்லைத் தட்டாதே' திரைப்படம் பெரிய பட்ஜெட் படம் அல்ல. ஆனால் பெரிய வெற்றியைப் பெற்ற படம்.

ரஜினி, கமல் நடித்து நாங்கள் எடுத்த படங்கள் வெற்றிகரமாக ஓடினால், ரஜினி படம், கமல் படம் என்றுதான் அவை பேசப்படும்.

இதுபோன்ற சின்ன பட்ஜெட் படங்கள் நூறு நாட்கள், 25 வாரங்கள் என்று ஓடும்போது, 'இது ஏவி.எம் படம்' என்று பேசுவார்கள். நமது பேனர் மதிப்பு உயரும்.

எனவே அந்த வகையிலும், பல ஆண்டுகளுக்கு முன்பாக நான் எடுத்த முதல் படம் வெற்றியடையாமல் போனபோது, நான் மனதில் கொண்ட வைராக்கியத்தை நிறைவேற்றிக் கொண்ட வகையிலும் 'பாட்டி சொல்லைத் தட்டாதே' படம் எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியைத் தந்தது.

அந்தப் படம் அவ்வளவு பெரிய வெற்றியடையும் என்று உண்மையில் நானே எதிர்பார்க்கவில்லை.

தமிழில் பெற்ற வெற்றியைத் தொடர்ந்து 'பாட்டி சொல்லைத் தட்டாதே' படத்தை தெலுங்கில் எடுத்தோம்.

'பாமமாட்டா பங்காரு பாட்டா' என்று பெயர். ஆச்சி ரோலுக்கு யாரைப் போடலாம் என்று யோசித்தோம். பானுமதியை ஒப்பந்தம் செய்தோம்.


• அசத்திய ஆச்சி!

"பானுமதி லட்சணமாக இருக்காங்க. தமிழிலும் இவங்களையே போட்டிருக்கலாம்" என்று எங்களுடைய கோவை டிஸ்ட்ரிபியூட்டர் கிருஷ்ணமூர்த்தி ஐயர் அபிப்ராயப்பட்டார். அதில் எனக்கு உடன்பாடு இல்லை என்றாலும், பின்னர் பானுமதி அவர்களோடு பேசிக் கொண்டிருந்தபோது கிருஷ்ணமூர்த்தி ஐயரின் கருத்தைச் சொன்னேன்.

"மனோரமா இந்த

ரோலை கிரியேட் பண்ணிட்டாங்க. நான் அந்த ரோலில் ஆக்ட் பண்றேன். அவ்வளவுதான். ஐ டு நாட் நோ ஹௌ ஃபார் ஐ வில் ரீச் மனோரமா" என்று ஆச்சிக்கு ஓர் அற்புதமான டிரிப்யூட் தந்தார் பானுமதி. வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி பட்டம் என்பார்களே, அதைவிட அதிகமான பாராட்டு அது. ஏனென்றால், பானுமதி யாரையும் அவ்வளவு சுலபமாகப் பாராட்டிவிடமாட்டார்.

## புள்ளி விவரப் புலி!



அடுத்த முறை உங்கள் வீட்டருகே தண்ணீர் லாரி வரும் பொழுது, அந்த லாரி டிரைவரை வீட்டுக்கு அழைத்துச் சென்று காபி, டிபன் உபசாரத்திற்கு பிறகு இந்த விவரத்தை அவர் காதில் போட்டு வைக்கவும். நம் பூமி 70% தண்ணீரால் நிரம்பியுள்ளது. ஆனால் அதில் 97% நீர் குடிநீர் அல்ல. மீதமுள்ள 2% உதவாக்கரை பனிக்கட்டிகளாக மாறிவிட்டன. மிச்சம் இருப்பது 1% தான். இந்தக் குட்டியூண்டு அளவு நீரைச் சுமந்து வரும் தண்ணீர் லாரிகள் துளி நீரையும் சிந்தாமல், மோகினி ஆட்டம், டிஸ்கோ ப்ராக்டீஸ் செய்யாமல் நம்மை வந்து அடைந்து விட்டால் நல்லது.

நடிப்பு என்று வந்துவிட்டால் பானுமதி அவர்களுக்கு மற்றவர்களை எப்படியாவது தம் திறமையால் 'ஓவர் டேக்' செய்துவிட்டு, தம்மை நிலை நாட்டிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டுவிடும். அவர் நடிக்கும் காட்சிகளில் அவருடன் நடிக்கும் கலைஞர்கள் ரொம்பவும் கவனமாக இருக்க வேண்டும். கொஞ்சம் அசந்தாலும், பானுமதி எங்கேயோ உயரத்துக்குப் போய் விடுவார்.

அப்படிப்பட்டவர், மனோரமா அவர்களைப் பாராட்டிச் சொன்ன போது, அதைக் கேட்ட எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. ஆச்சியிடம் சொன்னேன். பெரிதும் மகிழ்ந்து போனார்.

மனோரமாவை மட்டுமின்றி, 'பாட்டி சொல்லைத் தட்டாதே' படத்தைப் பார்த்துவிட்டு படத்தையும் பாராட்டினார் பானுமதி. மிகச் சிறந்த நடிகை, தயாரிப்பாளர், தென்னிந்தியாவிலேயே முதல் பெண் இயக்குனர், 'சண்டிராணி'யில் அந்தக் காலத்திலேயே ஸ்டண்ட், மியூஸிக் எல்லாம் செய்து காட்டிய பல்துறை வித்தகி பாராட்டிய படம் என்ற பெருமையும் 'பாட்டி சொல்லைத் தட்டாதே' படத்துக்கு உண்டு.

(தொடரும்)

# தெய்வானை

இல்லை...



நம் அலுவலகத்தில்! யாருக்கு? கண்ணீர் லாரி, தியாக MP3, கருணைக் கிழங்கு... ச்சீ... கருணை எக்ஸ்பிரஸ், பொறுமையின் பஸ் ஸ்டாப், புரட்சிப் பொங்கல் நம் 'திருமதி' தொடரின் கிளிசரின் நாயகி தெய்வானைக்குத்தான். இதோ நீங்கள் உங்கள் 'பக்கத்து வீட்டு' பெண்ணாகவே பாவிக்கும் தெய்வானை, உங்களின் தினம் தினம் 7½ கிலோ போஸ்ட் கார்டு, இன்லாண்ட் லெட்டர், போஸ்ட் கவர் (முக்கால்வாசி ஸ்டாம்ப் ஒட்டாமல்) வந்து தொபுக்கடீர் என விழுகிறது சாதாக் கேள்விகளுக்கு 'தாதா' போல் பதிலளிக்க கோதாவில் குதிக்கிறார்.

? எனக்குக் கல்யாணமாகி முப்பத்தி மூணு நாள் ஆகுது. இத்தனை நாள் தாம்பத்ய வாழ்க்கையில அவரு ஒருமுறைகூட என்னை சரியாப் புரிஞ்சு நடந்துக்கிட்டதே இல்லை. அதுல உச்சகட்டமா ஒரு சம்பவம் போன வாரம் நடந்துச்சு. வழக்கமா நைட்டு டிபனுக்கு அவர்தான் சட்னி அரைப்பாரு. அன்னிக்கு வெங்காயச் சட்னி அரைக்கச் சொன்னேன். ஆனா தக்காளிச் சட்னி அரைச்சுட்டாரு. மூணுகலா 10 தோசை சுட்டுத் தரச் சொன்னேன். அதுல ரெண்டை கருகலா சுட்டுக் கொடுத்திட்டாரு. இப்படி அவரு என்னை மீறி, எல்லை மீறிப் போயிடுவாரோன்னு என் உள் மனசுல ஒரு அலாரம் அடிக்குது. நான் இப்ப என்ன பண்ண? டைவர்ஸ் பண்ணிடவா?

- சொர்ணாக்கா, காளியூர்

! இல்ல சகோதரி. டைவர்ஸ் ஒண்ணும் 'மாகி நூடுல்ஸ்' மாதிரி ஈஸியா பண்ணக் கூடியதில்ல. கணவன் என்கிற கடலை, மனைவி என்கிற வெல்லப்பாகு இரண்டுமே பதமா இணைஞ்சாத்தான் வாழ்க்கைங்கிற 'கடலை மிட்டாயை' உருவாக்க முடியும். என் தோழி ஒருத்தியோட கணவர் கூட இப்படித்தானாம். ஆப்பிள் ஜூஸ் போடச் சொன்னா, ஆரஞ்சு ஜூஸ் போடுவாராம். சிக்கனை கிளீன் பண்ணச் சொன்னா, கிச்சனை கிளீன் பண்ணுவாராம். அப்புறம் என் தோழி அவரை மிரட்டாம, 'டார்லிங், டாய்லெட்டை க்ளீன் பண்ணிருங்க. ச்சோ ஸ்வீட், மோர்க்குழம்பு வைச்சிருங்க'ன்னு அன்பா வேலை வாங்க ஆரம்பிச்சா. இப்ப அவங்க வாழ்க்கை ஹுண்டாய் கெட்ஸ் கார் மாதிரி ஸ்மூத்தா போய்க்கிட்டிருக்கு. கணவன் - மனைவி உறவுங்கறது புரிஞ்சுக்கிட்டா, அடுப்பில இருக்குற புளியோதரை மாதிரி. புரிஞ்சுக்காட்டி, முந்தா நேத்து ப்ரிட்ஜ்ல வைக்க மறந்துபோன புளியோதரை மாதிரி. புரிஞ்சுதா!

? நான் ஒரு மெகா சீரியல் டைரக்டர் கிட்ட அசிஸ்டெண்டா ஆறு வருஷமா மொக்கை போட்டுக்கிட்டு இருக்கேன். எனக்கு வயது 32 (பதினோரு வருடங்களுக்கு முன்பு.) எனக்கு 33 வருஷமா கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசை. ஆனா நான் வேலை பாக்குற சீரியல் 2222 எபிசோட் ஓடிடுச்சு. இன்னும் 1111 எபிசோட்ஸ் மட்டும்தான் பாக்கி. அதுக்கப்புறம் நானும் ஒரு சீரியலை டைரக்ட் பண்ணிட்டா, என் லட்சியம் நிறைவேறிடும். இதைப் புரிஞ்சுக்காம எனக்காக ஊர்ல காத்துக்கிட்டிருக்கிற

# பதில்கள்

என் முறைப் பொண்ணு ராசாத்தி, அடிக்கடி 'எப்போ கல்யாணம்'னு என்னைக் கேட்டு தொந்தரவு பண்ணுறா. அவளுக்குப் புரியற மாதிரி அட்வைஸ் பண்ணுங்களேன்.

- காத்தவராயன், கோடம்பாக்கம்

! உங்க லட்சியத்தை ரொம்ப உயர்வான துன்னு சொல்றதைவிட 'ரொம்ம்...ப நீள மானது'ன்னு சொல்லலாம். ஆனா ஒரு பொம்பளை ஹேண்ட் பேக்ல என்ன இருக் கும்னு இன்னொரு பொம்பளைக்குத்தான் தெரியும். ராசாத்தி, நீங்க என் ஒண்ணுவிட்ட சகோதரி மாதிரி. நான் சொல்றதைக் கேளுங்க. மெகா சீரியல்ங்கறது ஒரு தவம் மாதிரி. அதை அனுபவிக்கணும். ஆராதிக்கணும், கெடா வெட்டி பூசை பண்ணணும். காத்தவராயன் ஒரு வேள்வி பண்ணிக்கிட்டு இருக்காரு. கேள்வி கேட்டு அவரை கேணையனாக்கா தீங்க. உலகத்தோட முதல் மெகா சீரியலான 'மகாபாரதத்துல' காந்தாரி என்ன பண்ணி னாள் தெரியுமா! 'மெகா சீரியலே இல்லாத இவ்வுலகில் பார்க்க வேறென்ன இருக் கிறது'ன்னு கண்ணைக் கட்டிக்கிட்டா. காத்தவ ராயன் இன்னும் ஆறே வருஷத்துல சீரியல் இயக்குநராயிடுவார். அதுக்கப்புறம் எட்டு வருஷம்தான். அந்த சீரியல் முடிஞ்சுரும். காத் திருங்க. போன்ல ஆர்டர் பண்ணிட்டு, 'பீஸா' டோர் டெலிவரிக்காக காத்துக்கிட்டு இருக் கறதில்லையா? அதுல ஒரு சுகமிருக்கு. கூடிய சீக்கிரம் உங்களுக்கு (அறுபதாம்) கல்யாணம் நடக்கும். பண்ணிட்டு நேரா ஏதாவது முதி யோர் இல்லமா பாத்து செட்டிலாயிடுங்க. வாழ்த்துகள்!

? தெய்வானை, உன்னை என் பொண்ணு மாதிரி நினைச்சுக் கேக்கறேன். எனக்கு வயசு 74. என் கணவருக்கு வயசு 81. வர வர அவர் போக்கே சரியில்லை. காலையில 11 மணிக்கு டீ.வி. பார்க்க உட்கார்ந்தாருன்னா, நைட்டு 11 மணி வரைக்கும் ஷிப்ட் போட்டுப் பார்க் குறாரு! அதுலயும் ராத்திரி 9 மணிக்கு வர்ற 'மஞ்சக்கயிறு' சீரியல் கதாநாயகி மாரி யம்மாவோட மாமியாரை இமை கொட் டாம, கொட்டாவி கூட விடாம, கொட்டக் கொட்டப் பார்க்குறாரு. அவரு அந்தம்மா வைக் காதலிக்கிறாரோன்னு எனக்கு ஒரு சந்தேகம் இருக்கு! அந்த சீரியல் வர்ற நேரம் கரண்ட் கட் ஆனாக்கூட, டீ.வி.யையே வெறிச்சுப் பார்த்துக்கிட்டிருக்காரு. என் எதிர்காலத்தை நினைச்சா எனக்கு பயமா இருக்கு. நான் இப்ப என்ன பண்ண?

- கோமளா கோவிந்தசாமி, கொட்டாம்பட்டி

! அம்மா, உங்க மனசு எப்படித் துடிக் குதுன்னு என்னால உணர முடியுது. ரயில்வே ட்ராக்ல பஸ் வரலாமா? விமான ஓடுதளத்துல மாட்டுவண்டி ஓடலாமா? அப்படித்தான் மனசுக்குள்ள சந்தேகமும்! உங்களுக்கு இந்தச் சின்ன வயசுலேயே இப்படி ஒரு பிரச்னை வந்திருக்கக் கூடாதுதான். நாய்க்குட்டிக்கு நகம் வளரலாம். கடனுக்கு வட்டி வளரலாம். மனசுல சந்தேகம் வளரலாமா... கூடாது. நான் ஒரு யோசனை சொல்லுறேன் கேளுங்க! மெகா சீரியல் இல்லாத ஒரு சனிக்கிழமை நைட்டாப் பார்த்து அவரைக் கூட்டிக்கிட்டு 'டிஸ்கோதெ'வுக்குப் போங்க. தாவு தீர்ந்து போற வரைக்கும் குத்தாட்டம் ஆடுங்க. களைச்சு உட்காருறப்ப, மென்மையா அவரு தோளைத் தொட்டுப் பேசுங்க. உங்க மனசுல உள்ளதையெல்லாம் குடம் குடமாக் கொட்டுங்க. அப்படியே நாலு தட்டுத் தட்டுங்க. வழிக்கு வந்திடு வாரு. ஆல் தி பெஸ்ட்!

கற்பனை : முகில்



# அருள்வாக்கு



**நா**ம் போடுகிற பிள்ளையார் சுழி ஒரு சின்ன எழுத்தின் மூலம் விக்னேச்வரரை ஸங்கேதமாகத்தான் காட்டுகிறது; வெளிப்படையாகப் பிள்ளையார் பேரைத் தெரிவிக்கவில்லை. ஆனால் பழங்காலச் சுவடிகளைப் பார்த்தால் அவற்றின் ஆரம்பத்தில் வெளிப்படையாகவே ஸ்ரீ கணாதிபதயே நம: என்று போட்டிருக்கும்.

எந்தக் காரியத்துக்குமே முதலில் கணபதிப் பிரஸாதத்தைப் பிரார்த்திக்க வேண்டுமென்றாலும், இந்த எழுத்து வேலையில் மட்டும் அவருக்கு எதனால் தனி முக்யத்வம் என்று யோசித்துப் பார்த்தேன். 'இங்கே முதலில் ஸரஸ்வதியைச் சொல்லாமல், பிள்ளையாரை ஏன் சொல்ல வேண்டும்?' என்று நினைத்தேன். வித்வான்களுடன் 'டிஸ்கஸ்' பண்ணினதில் ஒரு மாதிரி புரிந்தது. "கண" என்ற வார்த்தைக்கு உள்ள அனேக அர்த்தங்களில், பாஷா ஸம்பந்தமாகவே ஒன்று இருக்கிறது. ஒரே விதிக்குக் கீழே வருகிற எல்லா தாதுக்கள் அல்லது வார்த்தைகளை ஒரு "கணம்" என்று தொகுத்து வியாகரணத்தில் கொடுத்திருக்கிறது. இந்த கணங்களுக்கெல்லாம் அதிபதிதான் கணாதிபதி. பரமேச்வரனுடைய பூத கணங்களுக்குத் தலைவரானதால் கணபதி, கணாதிபதி, கணேசர், கணநாதர் என்றெல்லாம் அவருக்குப் பெயர் இருப்பதோடு, பதஸமூஹங்களுக்கெல்லாம் தலைவர் என்ற அர்த்தத்திலும் இப்படிப் பெயர் பெற்றிருப்பதால்தான் கணாதிபதயே நம: என்று போட்டு எழுத ஆரம்பித்திருக்கிறார்கள். விநாயகர் ப்ரணவ ஸ்வரூபம் என்றால், அந்த ப்ரணவம்தானே ஸகல சப்தங்களுக்கும் வார்த்தைகளுக்கும் ஆதாரம்? அதனால் அவரைப் பதஸமூஹங்களின் அதிபதியாகக் கொண்டு, எழுத ஆரம்பிக்கும்போது, முதலில் நமஸ்காரம் தெரிவிப்பது பொருத்தந்தான்.

அவர் ப்ரணவ ஸ்வரூபி என்றே புரிந்து கொண்டு - நாம் வலம் வந்து வணங்கி எல்லா நலமும் பெறுவோமாக.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

# எங்கே என் கண்ணன்?

*'தங்களிடமே
என்னை
ஒளித்து வைத்துக் கொண்டு
வெளியே தேடுவதே
இந்த மனிதர்களுக்கு
வாடிக்கையாகிவிட்டது!'*

**- ஸ்ரீ கிருஷ்ணன்**

## 1



வெகு நாட்களுக்குப் பிறகு காவிரியில் ஜலத் தாரைகள்! திபுதிபுவென்றும், திமுதிமுவென்றும்........ ஒரு விதப் பரவசத்தோடு பார்த்துக் கொண்டிருந்தார் சீனிவாசன். அறுபது வயதைத் தாண்டப் போகிறார். பன்னிரு திருமண் காப்போடும், குண்டஞ்சிக் கட்டோடும் மனிதர் குணசீலம் தெருவில் நடந்தால், வேதப்புத்தகம் ஒன்று கால் முளைத்து நடந்து போகிற மாதிரி இருக்கும்.

ஜலத்தாரைகள் திமிலோகமாக ஓடிவந்த படி இருக்க, முழங்கால் அளவு நீரில் கூட நிற்க முடியவில்லை. நிற்கும்போதே தெரியும், காலடி மணல் குறுகுறுப்போடு சரிபடும். குட்டி மீன்கள் வேறு செல்லக் கடி கடித்து விளையாடும். அதை வைத்தே ஆற்றின் வேகத்தை அனுமானித்து விடுவார் சீனு.

பிறந்ததே காவிரியின் கரையில்தானே? அவர் பிறந்த பத்தாம் நாள் புண்ணியாவசனத்தின்போதே ஆற்றங்கரையில் அவரைத் தன் காலில் போட்டுக் கொண்டு காவிரி நீரை விட்டவளாம் அவரது தாய்!

அதன் பிறகு காவிரி அவரது உடம்பில் ஓர் அங்கம் போலவே ஒட்டிக்கொண்டு விட்டது. காலையில் ஒருமுறை, மாலையில் ஒருமுறை காவிரி ஸ்நானம். அப்படியே சூரியனைப் பார்த்தபடியே சந்தியா வந்தனம். பிறகு அகத்துக்குள் நுழைந்தால் காத்துக் கொண்டிருப்பான் கண்ணன்! இந்த கண்ணன், ஒரு சாண் உயரம் கூட இல்லாத ஒரு மரப்பாச்சி. கருந்தேக்கில் செய்யப்பட்டிருக்க வேண்டும். ஆனாலும் நல்ல வேலைப்பாடு. கட்டை விரல் அளவுக்குத்தான் முகம். அதில் துளி குறுஞ்சிரிப்பு தொற்றிக் கொண்டிருந்தது.

அந்த கண்ணனுக்கு குட்டிப் பட்டுத் துணி சுற்றி, சின்ன நெற்றியில் சந்தனப் பொட்டும் வைத்து, கொஞ்சம் பூக்களைக் கிள்ளிப் போட்டு வளையல் சப்திக்க வணங்கி நிற்பாள் ராஜம். காவிரியில் இருந்து உள் நுழையும் சீனுவும், தன் திருவாராதனத்தைத் தொடங்கி விடுவார். அதன்

# இந்திரா செளந்தர்ராஜன்



பின் அரை மணியோ முக்கால் மணியோ...

இதுதான் அவரது நித்யப்படி!

இந்தத் திருவாராதனத்துக்கு காவிரி ஒரு பெரும் துணையாக இருந்தது. நடுவில் அது வறண்டதில், வீட்டுக் கொல்லையிலேயே குளித்துவிட்டு, கண்ணனையும் அந்தக் கிணற்று ஜலத்தில் நீராட்டவேண்டிய ஒரு நிலை.

நல்லவேளை... வருணபகவான் கருணையால் காவிரிக்குத் திரும்பவும் ஜீவன் வந்து விட்டது. பார்க்கப் பார்க்க சீனுவுக்கு ஒரே பரவசம்.

அவரை விடவும் அவரது ஒரே பிள்ளை சம்பத், காவரியில் தண்ணீர் பாய்கிறது என்றால் எகிறிக் குதிப்பவன். சென்னையில் ஒரு தனியார் நிறுவனத்தில் ஜெனரல் மேனேஜராக இருக்கிறான். நேற்று கூட அவனோடு போனில் பேசும்போது, சீனுவிடம் ஒரே காவிரி பிரதாபம். கூடவே கண்ணன் பற்றிய கவலை...

''சம்பா... இப்பத்தாண்டா காவிரி காவிரியா இருக்கு. நன்னா ஜலம் பாயறது. தண்ணி பாய ஆரம்பிச்சு நாலு நாள் கூட ஆகலை... அதுக்குள்ள எதிர்க்கரைல முதலை வந்துடுத்து... கிளம்பி ரெண்டு பேரும் வாங்க...''

''நான் என்னப்பா பண்ண... என் உத்யோகம் அப்படி...''

"என்னடா பெரிய உத்யோகம். வேண்டாம்னு நீ எழுதிக் கொடுத்துட்டு வந்துட்டா கூட எனக்குத் தேவலைதான். வரிசையா ஏழு தலைமுறை முடிஞ்சு, எட்டாவதா நான் இப்ப நம்ம ஆத்து கண்ணனுக்கு



திருவாராதனம் பண்ணிண்டு வரனே... அடுத்த பொறுப்பு உன்னதுதான். நீ இப்பவே வந்துட்டேன்னா, நானும் ராஜமும் அப்படியே வடக்க பத்ரி, கேதார்னு போய்ட்டு வருவோம். கங்கைல ஸ்நானம் பண்ணணும்ங்கற அந்த ஆசையும் கூடிண்டே போறது. இங்க ஆத்து கண்ணனை ஒருத்தர் பார்த்துண்டாதானே நாங்க நகர முடியும்?"

"அது சரி... கண்ணனுக்கு திருவாராதனம் பண்றதுக்காக என் ஜி.எம். போஸ்டிங்கை விடச் சொல்றியா நீ? வருஷம் பத்து லட்சம் சொச்சம் இப்ப வரது. இதை விட்டுட்டு அந்த மரப்பாச்சிக் கண்ணனுக்கு மணியாட்டிண்டு இருந்தா, ஊர்ல இருக்கறவா இல்லை, என் பொண்டாட்டி சாருவே என்னப் பார்த்து சிரிப்பா. அதாவது உன் மாட்டுப் பொண்!"

- இப்படி சம்பத் பதிலுக்குச் சொன்னதும், அதற்கு பதில் சொல்லத் தெரியாமல் சீனு விழித்ததும் நேற்றைய சம்பவம். இன்று சம்பத் வரப் போகிறான். நிச்சயம் காவிரியைப் பார்த்து குதூகலிப்பான். கூடவே ஒரு சஸ்பென்ஸ் என்று வேறு சொல்லியிருந்தான்.

**வா**சலையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் சீனு. திபுதிபுவென்று ஒரு கூட்டம் கோணல்மாணலாய் ஓடிக் கொண்டே போனது.

பாவம்.... அவ்வளவுபேருமே மனநலமில்லாதவர்கள். எவ்வளவோ வைத்ய முறைகள் வந்து விட்டாலும், குணசீலம் பெருமாளை பெரிய டாக்டராகக் கருதும் பலரும் இன்னமும் இருந்து கொண்டிருப்பதால், கோயிலில் பைத்தியங்களுக்கும் பஞ்சமில்லை. சமயங்களில் இந்தப் பைத்தியங்களில் சிலதுகள் அக்கம் பக்கத்து வீடுகளுக்குள் நுழைந்து விடும். அதன்பின் ஒரே அட்டகாசம்தான். இதனால் பெரும்பாலும் வீட்டுக் கதவைத் தாழிட்டே வைத்திருப்பார்கள்.

அடுக்களையிலிருந்து வெளிப்பட்ட ராஜம், "என்ன யோசனை?" என்றாள் சீனுவைப் பார்த்து.

"சம்பா வருவானான்னு பாத்துண்டிருக்கேன்..."

"அவன் என்ன சின்னக் குழந்தையா... கல்யாணமாகியே அஞ்சு வருஷம் ஆச்சு! ஞாபகமிருக்கட்டும்."

- பேச்சுப் போக்கில் ராஜம் சொன்னதில் ஓர் ஊசி இருந்து, அது நறுக்கென்று சீனுவின் மனசிலும் குத்திவிட்டது.

"அவனும் சின்னக் குழந்தை இல்ல... அவனுக்கும் ஒரு குழந்தை இல்ல..."

"ஆரம்பிச்சுட்டேளா. இந்த பேரப்பிள்ளை கவலை உங்களை விடாது போல இருக்கே..."

"ஏன் ராஜம்... உனக்கு இந்தக் கவலை இல்லையா. நிஜமா நீ சந்தோஷமாத்தான் இருக்கியா?"

ராஜத்துக்கும் என்னமோ மாதிரி ஆகி விட்டது. உள்ளே சுவாமி அறை நோக்கிச் சென்றாள்.

சன்னதிக்குள் சின்னதாக ஒரு கொலு மண்டபம். மண்டபத்தில் ஒரு குட்டி ஊஞ்சல். ஊஞ்சலில் அந்த கண்ணன் விக்ரஹம் பஞ்சணையில் படுத்திருப்பது போலப் படுத்திருந்தது. திருவாராதனை முடிந்து நிவேதனமும் ஆனபின், சீனு இப்படித்தான் படுக்கப் போட்டு விடுவார். அப்படியே ஒரு நாலுவரித் தாலாட்டுப் பாட்டு ஒன்றும் அந்த ஆத்தில் ஃபேமஸ்...

'ஆழிமழைக் கண்ணா
தாலேலோ...
ஆநிரைகளின் மன்னா
தாலேலோ...

## மனைவி!

"எப்பவும் நல்லதை நினைவுல வச்சுக்கிட்டு, நமக்கு நடந்த கெட்டதை மறந்துடணும். அப்பத்தான் வாழ்க்கையில சந்தோஷமா இருக்க முடியும்?"

"அதெப்படி? கட்டின மனைவியை மறந்துடறது துரோகமில்லையா?"

- கே. ஆனந்தன்

---



கோகுலத்து கோபாலா தாலேலோ...
கோவிந்த கிருஷ்ணா தாலேலோ...'

- அந்தத் தாலாட்டுப் பாட்டு இன்று நேற்றல்ல, எட்டு தலைமுறைகளாக மாறாமல் ஒலித்தபடி உள்ளது.

பூஜை அறைக்கு வந்த ராஜத்தின் மனதுக்குள் எல்லாமே திரண்டு வந்து முட்டியது. கண்களிலும் கண்ணீர் கொட்டியது. வாசல் பக்கத்தில் பாம் பாம் என்னும் ஹாரன் சப்தம். சீனு எழுந்து ஓடினார்.

வாசலில் பளபளவென்று வெளிர்ப் பச்சையில் பியுஜியட் கார். கதவைத் திறந்து கொண்டு சம்பத்தும் அவன் மனைவி சாருவும் இறங்கிக் கொண்டிருந்தனர்.

"சம்பா... வா....வா..."- சீனு உற்சாகமானார்.

"அப்பா..." - என்றபடியே அவனும் ஓடி வந்தான். அவனிடம் மாறாத அதே பாசம். ஆனால் உருவத்தில் ஏராளமான மாற்றம். மூக்குக்கு கிழே புதிதாக அடர்த்தியாக மீசை! கிருதாவும் நீண்டிருந்தது. சாருவும் கையில்லாத ரவிக்கையும், பாப் தலையுமாய் அவருக்குச் சற்று அதிர்ச்சியளித்தாள். கண்ணைத் துடைத்துக் கொண்டு ராஜமும் வாசற்புறம் ஓடி வந்தாள்.

"அப்பா... அம்மா... எப்படி இருக்கேள்..?"

"எங்களுக்கென்னடா... ஆமா, இது என்னடா கோலம்?"

"எதுப்பா... மீசையைச் சொல்றேளா?" - சீனு ஆமோதிக்க,

"சாருதான் 'உங்களுக்கு மீசை வெச்சா முகத்துல ஒரு புதுக் களை வந்துடும்'னு சொன்னா... வெச்சுப் பார்த்தேன். ஆபீஸ்லயும் கொஞ்சம் வாலாட்டினவால்லாம் அப்படியே வாலைச் சுருட்ட ஆரம்பிச்சா. மொத்தத்துல நல்ல ரிசல்ட்" என்றான்.

ராஜம் மாட்டுப் பெண்ணுடன் சேர்ந்து கொண்டாள். சம்பத் ஹாலில் தொங்கிக் கொண்டிருந்த ஊஞ்சல் பலகையில் போய் அமர்ந்தான்.

சாரு ஹேண்ட் பேக்கைத் திறந்து மாமியார், மாமனாருக்கென சென்னையிலிருந்து தான் சுமந்துகொண்டு வந்திருப்பதை அடுக்க ஆரம்பித்தாள். ராஜத்துக்கு ஒரு அக்குபஞ்சர் செப்பல், அப்படியே குளிருக்கு அடக்கமாக ஷால்... சீனுவிற்கு வாக்மேனும், பாரதியார் கோட்டு போல ஒரு ஸ்வெட்டரும்...

சீனுவோ 'சம்பா!' என்று ஆசையாக அவர் விளிக்கும் சம்பத்குமாரின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார்.

"என்னப்பா... என்னமோ என்னை இப்பத்தான் புதுசா பாக்கற மாதிரி பாக்கறேள்?"

"ஒண்ணுமில்ல... கார்ல வந்திருக்கியேன்னுதான் பார்த்தேன்."

"ஆபீஸ்ல கொடுத்துருக்கா. ஸ்ரீரங்கம், உறையூர், கும்பகோணம்னு ஒரு ரவுண்டு அடிச்சிட்டு வரலாமில்லையா... அதான் எடுத்துட்டு வந்தேன். உங்களுக்கும் அங்கள்லாம் கார்ல போய் இறங்கினா, அந்த குஷியே தனிதானே?"

"அது போகட்டும்... ஏதோ சஸ்பென்ஸ்ன்னியே என்ன அது?"

"என்னடா இன்னும் கேக்கலியேன்னு நினைச்சேன்..."

"சட்டுன்னு சொல்லு. ராத்திரி குடுகுடுப்பைக்காரன் வேற 'ஒரு முக்கியப்பட்ட சேதி வரப்போகுது... அதனால எல்லாம் மாறப் போகுது'ன்னு வயித்தக் கலக்கிட்டுப் போயிருக்கான்..."

- சீனு அப்படிச் சொன்னதுதான் தாமதம், சம்பத்குமார் சாருவை படுவேகமாகப் பார்த்தான்.

அவள் முகத்தில் ஒருவித மிரட்சி!

(தொடரும்)

பொதுவாகத் தொழிலதிபர்கள் தங்கள் நிறுவனத்தை விளம்பரப்படுத்துவதுபோல், தம்மை வெளிப்படுத்திக் கொள்ளத் தயங்குவார்கள். ஆனால் வசந்தகுமார் அப்படியல்ல. வசந்த் & கோ விளம்பரங்களில் வட்டத்துக்குள் சிரித்த முகமாக எப்போதும் காட்சியளிப்பார்.

இன்றைக்கு வீட்டு உபயோகப் பொருள்களில் இந்தியாவின் நெ.1 டீலராக 'வசந்த் & கோ'வை உயர்த்தியிருக்கும் இவர், ஆரம்பத்தில் செய்தது சாதாரண கூடைச்சேர் வியாபாரம். அதன்பிறகு படிப்படியாகத் தாம் வளர்ந்த விதத்தை நம்மிடம் விளக்கினார்.

''நான் கன்னியாகுமரியிலுள்ள அகஸ்தீஸ்வரம் தாலுகாவைச் சேர்ந்தவன். 1970ல் நாகர்கோவில் இந்து கல்லூரியில் டிகிரி முடித்து, தேர்தல் பிரசாரங்களில் தீவிரமாக ஈடுபட்டுக் கொண்டிருந்தேன். வில்லுப்பாட்டு, கச்சேரியெல்லாம் பிரமாதமாகப் பண்ணுவேன். அப்பொழுது சென்னை ராயபுரத்தில் போட்டியிட்ட அண்ணன் குமரி அனந்தனுக்காக சென்னைக்கு வந்து பிரசாரத்தில் ஈடுபட்டேன். ஆனால், அவர் தேர்தலில் தோற்றுப் போனார். இந்த நிலையில் ஊருக்குச் செல்ல மனமில்லாமல், சென்னையிலேயே தங்கி விடுவதென முடிவெடுத்தேன். வி.ஜி.பி கம்பெனியில் சேல்ஸ்மேனாக என் வாழ்க்கையைத் தொடங்கினேன்.

தொழில் தெரிந்தவர்களிடம் அடைக்கலாம் புகுந்ததால், எல்லாவற்றையும் முறையாகக் கற்றுக் கொள்ளத் தொடங்கினேன். 'எல்லோருக்கும் எல்லாமும்' என்கிற கோட்பாடு உடையவர்கள் வி.ஜி.பி சகோதரர்கள். சாதாரண மக்களால் பெரிய விலை கொடுத்து வீட்டு உபயோகப் பொருள்களை வாங்க முடியாது என்பதால், தவணை முறைத் திட்டத்தை மக்களிடையே அறிமுகப்படுத்தினர். சேல்ஸ்மேனாக வி.ஜி.பி என்கிற வியாபார பாடசாலைக்குள் நுழைந்த நான், ஏழு வருடங்கள் கழித்து, மும்பைக்கு பணி மாற்றம் செய்யப்பட்டது பிடிக்காமல் வெளியேறினேன். சொந்த வியாபாரத்தில் இறங்க என்னைத் தயார்ப்படுத்திக் கொண்டேன்.

அவ்வளவுதான்... அட்வைஸ் மழை என் மீது கொட்ட ஆரம்பித்தது. 'வி.ஜி.பியில் இருந்தது போல் மரியாதை இனி கிடைக்குமா?', 'அதில் பெற்ற சம்பளம் இதில் கிடைக்காதுப்பா' என்றெல்லாம் வார்த்தைகளாலேயே முட்டுக்கட்டை போட்டனர். வி.ஜி.பியின் வாடிக்கையாளரும், என் நண்பருமாக இருந்த ஞானசேகர், என் உதவிக்கு வந்தார். தி.நகரிலுள்ள அவரது கடையை எனக்குக் கொடுத்தார். என் வாழ்க்கை கவுண்டவுன் அன்றிலிருந்துதான் தொடங்கியது.

# “வியாபாரம் வேறு... அரசியல் வேறு!”

ஆரம்பத்தில் கூடைச் சேர், சுவர்க் கடிகாரம், ஸ்டீல் பீரோ போன்றவற்றை தவணை முறையில் விற்றுக் கொண்டிருந்தேன். 80களில் டீ.வி. தமிழ்நாட்டுக்கு அறிமுகமானது. விமானம் போல் மக்களுக்கு அன்றைய தேதியில் டீ.வியும் ஒரு அதிசயப் பொருளாகவே இருந்தது.

இந்தச் சமயத்தில் என்னை உகப்பேற்றும் சம்பவம் ஒன்று நடந்தது. ஒருநாள் எதிர்க்கடைக்காரர் என்னிடம்




வந்து, ''எத்தனை நாளைக்குத்தான் கூடைச்சேர் பிஸினஸ் பண்ணுவே. ஏற்கெனவே நாலு பேர் இதே இடத்துல இழுத்து மூடின பிஸினஸைத்தான் நீயும் பண்ணிட்டு இருக்கே'' என்று குத்தலாகப் பேசினார். என் முகம் சிவந்தது. உடனே ஒரு விசிட்டிங் கார்டின் பின்புறம் 'சரியாகப் பத்து வருடங்கள் கழித்து, இந்தியாவிலேயே அதிக விலைக்கு விற்பனையாகும் காரில் வந்து இதே இடத்தில் உன்னைச் சந்திக்கிறேன்' என்று மளமளவென்று எழுதிக் கொடுத்துவிட்டு வந்துவிட்டேன். என் உழைப்பின் மீது நம்பிக்கை வைத்து மேலும் கடினமாகப் போராட ஆரம்பித்தேன்.

ஆரம்பத்தில் டீ.விக்களை காரில் எடுத்துக் கொண்டு போய் வீடு வீடாக விற்க முயற்சித்த நான், பின்னர் எனது அணுகுமுறைகளை மாற்றிக் கொண்டேன். விசேஷ தினங்களின்போது மக்களை ஈர்க்க சலுகை விலையில் பொருள்களை விற்கத் தொடங்கினேன். லாபம் குறைவாக வந்தாலும், இதனால் விற்பனை பெருமளவில் கூடியது. விளம்பரங்களில் கவனம் செலுத்தினேன். கடைக்கு வாடிக்கையாளர்களைக் கொண்டு வருவதில் விளம்பரத்துக்கு மிக முக்கியப் பங்கு உண்டு. அதேபோல் வீடு வீடாகச் செல்லாமல், நிறுவனங்களுக்கே சென்று மொத்தமாக ஆயிரக்கணக்கில் டி.விக்களை விற்க ஆரம்பித்தேன்.

இதன் பயனாக, 85ம் வருடம் சாலிடர் டி.வி நிறுவனம் உச்சத்தில் இருந்த பொழுது, அதன் நெ.1 டீலராக உயர்வு பெற்றேன். இதைப் பாராட்டி 1988ம்

வருடம் இந்தியாவிலேயே அதிக விலையுடைய 'ஸ்டாண்டர்டு 2000' காரை எனக்குப் பரிசாக அளித்தனர். சரியாகப் பத்து வருடங்கள்... எதிர்க் கடைக்காரனிடம் விட்ட சவாலில் ஜெயித்தே விட்டேன்!

**85**ம் வருடம், சக்தி ஃபைனான்ஸ் என் வளர்ச்சிக்கு இன்னொரு உறுதுணையாக அமைந்தது. சென்னையிலுள்ள அரசு ஊழியர்களுக்குத் தவணை முறையில் வீட்டு உபயோகப் பொருள்களை விற்கலாம் என்று முடிவெடுத்தேன். அதற்கு சக்தி ஃபைனான்ஸில், 'தமிழகம் முழுக்க இருக்கும் அரசு ஊழியர்களுக்கு இதுபோல் வழங்கினால்தான் ஃபைனான்ஸ் அளிக்க முடியும்' என்றனர். இந்த ஒரு காரணத்துக்காக, தமிழகம் முழுக்க வசந்த் & கோவின் கிளைகள் பரவின. இன்று தமிழ்நாடு, பாண்டிச்சேரி, பெங்களூர் என 41 கிளைகள்.

மொத்தமாக வாங்கி அதை குறைந்த விலைக்கு விற்பதால், வாடிக்கையாளர்கள் தொடர்ந்து ஆதரவு கொடுக்கின்றனர். சுமார் நூறு கம்பெனிகளின் தரமான பொருள்களை விற்று வந்த எங்களுக்கு, 95ம் வருடம் 'வீட்டு உபயோகப் பொருள்களின் நெ.1 டீலர்' என்கிற பெருமை கிடைத்தது.

வருடா வருடம் எங்களது கடைகளில் 1,20,000 டி.விக்கள் விற்பனையாகின்றன. ஃப்ரிட்ஜ் 60,000, வாஷிங் மெஷின் 60,000 என நாளுக்கு நாள் எண்ணிக்கை கூடிக்கொண்டேதான் போகிறது. 2005-2006ம் வருடத்தில் முந்நூறு கோடி வருமானம் எட்ட இலக்கு நிர்ணயித்திருக்கிறேன்.

வியாபாரம், அரசியல் இரண்டிலும் நான் இருப்பது பலரையும் உறுத்துகிறது. கதர், காந்தி, காங்கிரஸ்... இந்த மூன்றின் மீதும் பற்றுள்ள குடும்பம் எங்களுடையது. வியாபாரத்தில் சம்பாதிப்பதை, அரசியலிலும் மனதாரச் செலவு செய்கிறேன். மற்றபடி நான் வியாபாரத்தில் அரசியலை நுழைப்பதில்லை. அது வேறு... இது வேறு... சேல்ஸ் டாக்ஸ், இன்கம் டாக்ஸ் ஒழுங்காகக் கட்டினால் எந்த வியாபாரியும் தைரியமாக அரசியலில் ஈடுபடலாம்.



## "உழைப்பாளியின் பின்னால்தான் சமுதாயம் என்றும் நிற்கும்!"

அடுத்ததாக 'வசந்த் & கோ'வை இந்தியா முழுக்க விரிவுபடுத்தவுள்ளேன். இதற்கெல்லாம் என்னைத் தயார்படுத்துவது, என் பாஸிட்டிவான அணுகுமுறைதான். இந்தத் தன்மை கொண்ட புத்தகங்கள் எங்கிருந்தாலும் வாங்கிப் படித்து விடுவேன். உழைப்பாளியின் பின்னால்தான் சமுதாயம் என்றும் நிற்கும். அதற்கு அடிப்படைத் தேவை பாஸிட்டிவான எண்ணங்கள்தான்."

- **ச.ந.கண்ணன்,**

படம் : **ஸ்ரீஹரி**

# சிரிக்க மறந்த மனமே!

மாத ஊதியமாகப் பத்தாயிரம் ரூபாய். லட்டு மாதிரிக் கிடைத்த மார்க்கெட்டிங் பிரதிநிதி வேலையில் ஐந்தாண்டுகள் ஜொலித்த லலிதாவால், திருமணத்துக்குப் பிறகு அதில் தொடர முடியவில்லை. கணவர் துளிக்கூட அதற்குக் காரணமில்லை. பிறகு? உறவினர்கள், நண்பர்களின் வீட்டு விசேஷங்களுக்குப் போவதென்றால் துள்ளிக் குதித்து கிளம்பி விடுவார் ரேவதி. திருமணத்துக்குப் பிறகோ, ஷாப்பிங் செல்வதைக் கூட தவிர்த்து விடுகிறார். ஏன்?

இந்த இருவர் மட்டுமல்ல, இந்தியாவில் பன்னிரண்டு சதவிகிதம் பெண்கள், இவர்களைப் போலவே வெளியே சொல்லவும் முடியாத, வெளியே செல்லவும் முடியாத ஒரு பிரச்னையோடு வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்கிறார் யூரோ கைனகாலஜிஸ்ட் டாக்டர் கார்த்திக் குணசேகரன். என்ன பிரச்னை அது?

''ஆங்கிலத்தில் பெல்விக் ஃப்ளோர் டிஸ்பங்க்ஷன் என்று சொல்கிறோம். அதாவது பெல்விக் ஃப்ளோர் தசை நார்களின் செயல் இழப்பு. பெண்களின் இடுப்பு எலும்புக்கும், முதுகு எலும்புக்கும் இடையில் இருப்பவைதான் பெல்விக் ஃப்ளோர் (pelvic floor) தசைகள். கர்ப்பப்பை, மலக்குடல், சிறுநீர்ப்பை முதலியவற்றுக்கு ஆதார அமைப்பாக இந்தத் தசைகள் பணியாற்றுகின்றன. சுகப் பிரசவம், எடை தூக்குதல், ஆஸ்துமா, உடல்பருமன், மலச்சிக்கல் போன்றவற்றால் இந்தத் தசைகள் பாதிக்கப்படும் போது, பெண்கள் வெளியே சொல்ல முடியாத பிரச்னையை சந்திக்கிறார்கள். அவற்றில் முக்கியமானது உணர்வற்ற, தன்னிச்சையான சிறுநீர்க் கசிவு'' என்றவர், ''பெல்விக் ஃப்ளோர் டிஸ்ஃபங்ஷன் ஏற்படுவதற்கு சுகப்பிரசவம்தான் முக்கியக் காரணம் என்று அமெரிக்கப் புள்ளி விவரங்கள் திட்டவட்டமாகக் கூறுகின்றன'' என்கிறார்.

சுகப்பிரசவத்தின் போது குழந்தையின் தலை நீண்ட நேரம் வெளிப்பாதையில் அழுத்துவதினால், சிறுநீர்ப்பை, மலக்குடல் முதலியவற்றில் தளர்ச்சி ஏற்படுகிறது. மேலும் ஆயுதம் மூலம் குழந்தை பெறும் பெண்களுக்கு ஆசனவாயில் பிளவு ஏற்பட்டு மலக்கசிவும் ஏற்படலாம். இந்தப் பாதிப்பின் விளைவுகள் பிரசவத்துக்குச்



சில காலத்திற்குப் பிறகே தெரிய வருகின்றன.

குறிப்பாக சிறுநீர் கழிக்கும்போது, ஏதோ ஒன்று இறங்குவது போல இருக்கும். இதைவிடக் கொடுமையானது, இவர்கள் இருமினாலோ, தும்மினாலோ, பலமாகச் சிரித்தாலோ சட்டென்று சிறுநீர் வெளிப்பட்டுவிடும்'' என்றவர், ''இதுபோன்ற சிறுநீர் கசிவுகள் பெண்களின் உடல்நிலையைப் பாதிப்பதைக் காட்டிலும், மனதை அதிக அளவு பாதிக்கின்றன. இதற்குக் காரணம் பெரும்பாலான பெண்கள் 'இது வயதாவதால் வரும் பிரச்னை. இதற்கு



• பெல்விக் ஃப்ளோர் சோதனைக் கருவி

ஏதும் தீர்வு இல்லை' என்று நம்புவதுதான். ஆனால் இது காலம் காலமாக இருந்து வரும் பிரச்னை. இத்தகைய இன்னல்களைச் சரி செய்வதற்கு, அயல் நாடுகளில் யூரோ கைனகாலஜி அண்ட் பெல்விக் ரீகன்ஸ்ட்ரக்டிவ் சர்ஜரி (urogynaecology and pelvic reconstructive surgery) என்ற புதிய பிரிவு எப்போதோ வந்து விட்டது. இப்போது சென்னையிலும் அறிமுகப்படுத்தியிருக்கிறோம். இனி இதை மனப்பிரச்னையாகக் கருதி, மனக்குள்ளேயே பொத்தி வைக்க வேண்டிய அவசியம் இல்லை. தைரியமாக முன் வந்து நிரந்தரத் தீர்வு பெறலாம்'' என்கிறார் இதற்கான சிறப்பு மேற்படிப்பை முடித்திருக்கும் டாக்டர் கார்த்திக் குணசேகரன்.



• கார்த்திக் குணசேகரன்

பெல்விக் தசைகளின் செயல்திறன் இழப்பால் வேறு பிரச்னைகள் உண்டா?

''இருமல், தும்மல் மற்றும் சிரிக்கும்போது ஏற்படும் சிறுநீர்க் கசிவை ஸ்ட்ரெஸ் யூரினரி இன்கன்டினென்ஸ் என்கிறோம். இன்னும் சிலருக்குக் கழிவறையை நெருங்கும் முன்பே அடக்க முடியாமல் சிறுநீர்க் கசிவு ஏற்படும். வேறு சிலருக்கு தண்ணீரில் கை அலசும் போதோ, குழாயில் நீர் கொட்டுவதைப் பார்த்தோ கூட சிறுநீர்க் கசிவு ஏற்படும். இது அர்ஜ் இன்கன்டினென்ஸ். மூன்றாவது வகை, மேற்கண்ட இரண்டு பிரச்னைகளும் கலந்த மிக்ஸ்ட் யூரினரி இன்கன்டினென்ஸ். நம் நாட்டுப் பெண்களிடம் அதிகம் காணப்படுவது இந்த வகைதான்'' என்றவர், சிகிச்சை பற்றி சொன்னார்.

''இத்தகைய பிரச்னைகளோடு வரும் பெண்களுக்கு எந்த வகைப் பிரச்னை என்பதை நவீன பெல்விக் ஃப்ளோர் பரிசோதனை மூலம் கண்டறிந்து, லேப்ராஸ்கோபிக் பர்ச் (Laparoscopic Burch) என்ற அறுவை சிகிச்சை செய்கிறோம். இதன்மூலம் தளர்ந்த சிறுநீர்ப்பை தூக்கி நிலைநிறுத்தப்படுகிறது. சிலீங் ஆபரேஷன் என்ற நவீன அறுவை சிகிச்சை முறையில், சிறுநீர்க் குழாய்க்குக் கீழே ஒரு சிறிய நாடா போன்ற அமைப்பைப் பொருத்தியும் நிரந்தரத் தீர்வு பெறலாம். இன்னும் சிலருக்கு பெல்விக் ஃப்ளோர் உடற்பயிற்சிகளே போதுமானதாக இருக்கும்'' என்கிறார். இந்தப் பிரச்னைகளால் அவதியுறும் பெண்கள் மேலும் விரிவான விவரங்களை அறிந்து கொள்ள www.urogynaecology.in வலைத்தளத்தை அணுகலாம்.

• ஸ்ரீ

# “பிளாட்பாரத்தில்

**தெலுங்குத் திரைப்பட உலகின் 'ஆல் டைம் கிரேட்' என்று மதிக்கப்படுபவர் அக்கினேனி நாகேஸ்வர ராவ். வயது 81. இன்றும் நடித்துக் கொண்டு இருக்கிறார். நிறைவான வாழ்க்கை வாழும் மனிதராக தம்மைப் பற்றி சந்தோஷமாகக் குறிப்பிடுகிறவர், அண்மையில் சென்னைக்கு ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொள்ள வந்திருந்தார். அவருடன் ஓர் உற்சாக சந்திப்பு.**

**உங்களது அறுபது வருட கால நடிப்புலக வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கிறபோது எப்படி உணருகிறீர்கள்?**

"திருப்திகரமாக உணருகிறேன். நான் சமூகத்தின் அடிமட்ட நிலையிலிருந்து, இன்றுள்ள உயர்ந்த நிலைமைக்கு வந்திருக்கிறேன். நாலு வயதிலேயே அப்பாவை இழந்தவன். அண்ணன்களால் வளர்க்கப்பட்டவன். சிறு வயதிலேயே நாடக கம்பெனியில் சேர்ந்து, ஊர் ஊராக நாடகம் போடுவதற்காகச் சென்றவன். அப்படி ஒரு தடவை தெனாலியில் நாடகம் முடிந்து, சொந்த ஊரான குடிவாடாவுக்கு ரயிலில் சென்று கொண்டிருந்தேன். ரயில் விஜயவாடா ஸ்டேஷனில் நின்றபோது பிளாட்பாரத்தில், என்னைப் பார்த்தார் தெலுங்கு டைரக்டரும், தயாரிப்பாளருமான கண்டசாலா பலராமையா. தமது படத்துக்கு ஹீரோ தேடிக் கொண்டிருந்த அவரது கண்களில் நான் பட்ட நேரம், என் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை. எனது குடும்பத்தினரைச் சந்தித்து, சினிமாவில் என்னை நடிக்க வைக்க அனுமதி கேட்டார். ஏழைக் குடும்பமல்லவா? சந்தோஷமாய் சம்மதித்தார்கள். ரயில் ஏறி, சென்னை சென்ட்ரல் ரயில் நிலையம் வந்து இறங்கி, ஜட்கா வண்டியில் மைலாப்பூரில் இருந்த சினிமா கம்பெனி ஆபீசுக்குப் போனது எனக்கு என்றைக்கும் மறக்காது."

**உங்களது வெற்றிக்கு மிக முக்கியமான காரணம் என்ன?**

"கடுமையான உழைப்பு, அதிர்ஷ்டம் எல்லாம் காரணமானாலும்கூட, அன்றைக்கு எடுக்கப்பட்ட படங்களின் கதைகள்தான் முக்கியமான காரணம். ஹீரோக்களுக்காக இன்றைக்குக் கதைகள் எழுதுகிறார்கள். ஆனால் அன்று, கதைதான் ஹீரோ. கதைகள்தான் ஹீரோக்களை உருவாக்கின. இன்றைக்குக்கூட, எனக்குப் பிடித்திருந்தால், நல்ல கேரக்டராக இருந்தால் மட்டுமே நான் நடிக்க ஒப்புக்கொள்கிறேன்."

**உங்களின் 'தேவதாஸ்' படம் இன்றைக்கும் ரசிக்கப்படும் படமாக இருக்கிறது. ஆனால் பல கோடி செலவில் ஐஸ்வர்யாராயும், ஷாருக்கானும் நடித்த 'தேவதாஸ்' எதிர்பார்த்த வெற்றியைத் தரவில்லையே!**

• 'தேவதாஸ்' அன்று...



"இந்த 'தேவதாஸ்' படத்தை நான் பார்க்கவில்லை. இது, உலகளாவிய ரசிகர்களுக்காக நவீன தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தி எடுக்கப்பட்ட படம். அதனால்தான் ஆஸ்கார் விருதுக்குக்கூட அனுப்பப்பட்டது. நான் நடித்த 'தேவதாஸ்' படத்தில், தேவதாஸும், பார்வதியும் சந்திக்கவே மாட்டார்கள். இது கதைக்கு வலு சேர்த்தது. ஆனால் ஒரிஜினல் கதையில் சில மாற்றங்களுடன் சமீபத்திய படம் எடுக்கப்பட்டது. வர்த்தக ரீதியில் இதுவும் வெற்றியடைந்ததாகவே நான்

கேள்விப்பட்டேன்."

**சென்னையில் குடியிருந்த நீங்கள், ஹைதராபாத்துக்கு குடிபெயர என்ன காரணம்?**

"நான் வறுமை காரணமாக ஐந்தாம் வகுப்புடன் படிப்பை நிறுத்தும்படியானது. என் மனைவியும் படித்தவளில்லை. எனவே, நான் என் குழந்தைகளை நன்றாகப் படிக்க வைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். சென்னையில், நல்ல கான்வென்ட் பள்ளிகளில், தெலுங்கு சொல்லித் தரப்படவில்லை. தெலுங்கு சொல்லித் தந்த பள்ளிகளில், நல்ல



• நாகேஸ்வரராவ்

# கண்டெடுக்கப்பட்டேன்!"

ஆங்கிலக் கல்வி இல்லை. எனவே குழந்தைகளின் தெலுங்குடன் இணைந்த கான்வென்ட் படிப்புக்காக, இருபது வருட சென்னை வாழ்க்கையை முடித்துக் கொண்டு ஹைதராபாத்துக்குச் சென்றேன்."

**ஏன் சினிமாவுக்கு வந்தோம் என்று எப்போதாவது வருத்தப்பட்டிருக்கிறீர்களா?**

• ...இன்று!



"ஒரு கணமும் அப்படி ஒரு நினைப்பு எனக்கு வந்ததில்லை. இனியும் வராது. பிளாட்பாரத்தில் கண்டுடெடுக்கப்பட்ட நான், இன்று இந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறேன் என்றால், அதற்குக் காரணம் சினிமா உலகம்தான்."

**என்.டி.ஆர். போல, அரசியலுக்கு வர நீங்கள் ஏன் ஆர்வம் காட்டவில்லை?**

"என்.டி.ஆர். அரசியலுக்கு வந்தவுடன், அவரை எதிர்த்து, சமாளித்து அரசியல் நடத்த வேண்டும் என்பதற்காக, என்னை காங்கிரஸ் கட்சியில் சேரும்படி வற்புறுத்தினார் இந்திராகாந்தி. அவரது நோக்கத்தைப் புரிந்து கொண்ட நான், அரசியலில் குதிக்க மறுத்து விட்டேன். அதன் பின் ராஜீவ் காந்தி வற்புறுத்தினார். அப்போதும் மறுத்துவிட்டேன்."

**உங்களுக்குப் பேத்தியாக நடித்த ஸ்ரீதேவியுடன், பின்னர் ஜோடியாக நடித்தீர்களே! அப்போது தர்மசங்கடமாக இருக்கவில்லையா?**

"ஆமாம்! ஆனால் அதில் தவறு என்ன இருக்கிறது? ஏன் தர்மசங்கடப்பட வேண்டும்? நான் நடிகன். கொடுக்கிற கேரக்டரில் ஈடுபாட்டுடன், திறமையாக நடிக்க வேண்டும். அதுதான் முக்கியம். ஏன், எம். ஜி.ஆர்., சிவாஜி இருவரும்கூட வயதான காலத்தில், இளம் பெண்களுக்கு ஜோடியாக நடித்திருக்கிறார்கள். சின்ன வயதில் முதிய வேடத்தில் நடிப்பது போலவே, வயதான பின், இளைஞனாக நடிப்பதும் நடிப்பு தான்."

சந்திப்பு, படம் : **எஸ்.சந்திரமௌலி**

39

# குறையொன்றுமில்லை

**நா**ன்கு குணங்களையுடைய நான்கு வேதங்களுக்கு, 'பரமப் பிரமாணம்' என்று பெயர். அந்த பரமப் பிரமாணமாகிற வேதத்தைக் கொண்டு, பரமப் பிரமேயமாகிற பரமாத்மாவை நாம் உணர்கிறோம். அந்த வேதம் நமக்கு இந்த பூலோகத்திலே கிடைக்கின்ற வகையிலே, வியாஸ பகவான் துவாபர யுகத்தின் முடிவிலே தோன்றி தொகுத்தளித்தார். பகவானே அவ்வாறு வியாஸ ரூபியாய்த் தோன்றி விசேஷமாகக் காப்பாற்றி, கலியுகத்திலே இருக்கிறவர்களுக்குப் பூரணமாக அதைச் சொல்வதற்குக் கஷ்டம் என்று, தனித்து தனித்து இது ரிக்வேதம், இது ஸாம வேதம், இது யஜுர் வேதம், இது அதர்வண வேதம் என்று வகுத்துக் கொடுத்திருக்கிறான்.

அதனால், பகவானுக்கு இது - இந்த வியாசாவதாரம் - அனுப்பிரவேசாவதாரம் என்று பெயர். வேத வியாசரை அனுப்பிரவேசித்து வேதங்களை விவரித்தான்.

பூர்வ யுகத்திலெல்லாம் எல்லா வேதங்களும் ஒன்றாக இருந்தன. எல்லோரும் எல்லா வேதங்களையும் தரித்தார்கள். ரிக் வேதத்தைச் சொல் என்றால், ரிக் வேதத்தைச் சொல்வார்கள். யஜுர் வேதம் சொல்வார்கள். ஸாம வேதம் என்று கேட்டாலும் உடனே சொல்வார்கள். அதர்வணம் சொல்வார்கள். இப்பொழுதோ, ஒரு வேதத்தை அத்யயனம் பண்ணுவதே ரொம்ப சிரமமாக இருக்கிறது. அதை தரிப்பதே கஷ்டமாக இருக்கிறது. அதனால், வேதங்களை எம்பெருமான் அவதாரம் பண்ணி தொகுத்தான்.

இப்போது நாம் வாழ்ந்து கொண்டிருக்கிற இருபத்தியெட்டாவது கலியுகத்திலே, வியாசருடைய புதல்வராக இருக்கக் கூடிய கிருஷ்ணத்வைபாயனர் என்று சொல்லக் கூடியவர் - கிருஷ்ணன் என்று பெயர் அவருக்கு... தீபத்திலே தோன்றியதனாலே த்வைபாயனர். சத்யவதி சுத : என்று சத்யவதிக்குப் பிறந்தவர். இப்படிப் பட்ட வியாஸர் குள்ளமாக இருப்பார். இவரை தியானம் பண்ணினாலே சர்வ பாபங்களும் போகும். வியாஸ தியானம் சுலோகத்தைச் சொன்னால், ஸ்ம்ருதி பலம் ஏற்படும். குறையாத நல்ல ஞாபக சக்தி இருக்கும்.

குழந்தைகளுக்கெல்லாம் இந்த சுலோகத்தைச் சொல்லிக் கொடுக்க வேண்டும். படித்ததெல்லாம் சமயத்திலே ஞாபகம் வரவேண்டுமல்லவா...? இந்த வியாஸரை தியானம் பண்ணுவதனாலே அது கிடைக்கிறது.

திருவனந்தபுரம் போய், அனந்தபத்மநாப சுவாமியை சேவித்துவிட்டுச் சுற்றி வருகிறபோது பார்க்கலாம்... அங்கேயே மேலே ஒரு சன்னதி, உள்ளுக்குள்ளேயே இருக்கிறது. அங்கே ஒருத்தர் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். இன்னொருத்தர் அவரைப் பார்த்துக் கைகூப்பிக் கொண்டு நின்றுகொண்டிருக்கிறார். உட்கார்ந்திருப்பவர் யார் என்றால், இப்போது நமக்கு வியாசராக இருக்கக் கூடிய, பராசருடைய திருக்குமாரர், மஹாபாரதத்தை எழுதிய மகான், வேதங்களை விவரித்த வியாஸ பகவான் - இவர் உட்கார்ந்து கொண்டிருக்கிறார். நின்று கொண்டிருப்பவர் யாரென்றால், இதற்கப்புறம் கிருத யுகம், திரேதாயுகம், துவாபர யுகம் வருகிறபோது, மறுபடியும் வியாஸாவதாரம் பண்ணப் போகிறவர். அவர் யாரென்றால், துரோணாச்சார்யருடைய திருக்குமாரரான அச்வத்தாமர். அவர்தான் அடுத்த துவாபர யுகத்திலே வியாஸராக அவதாரம் பண்ணுவார். அதற்குள் வேதங்கள் மறுபடியும் ஒன்றாகச் சேர்ந்து போய்விடும். துவாபர யுகத்தில் பகவான் வியாஸாவதாரம் பண்ணுவான். அசுவத்தாமருக்குள்ளே புகுந்து, வேதங்களை விவரிக்கிற காரியத்தைப் பண்ணுவான்.

அதனால்தான் 'வியாஸாய விஷ்ணு ரூபாய! வியாஸ ரூபாய விஷ்ணவே!!

நமோ வை பிரம்ஹ நிதயே வாஸிஷ்டாய நமோ நம:' என்று வியாஸரை விஷ்ணுவாகவே சொல்லியிருக்கிறது.

விஷ்ணுவினுடைய அம்சமாக வியாஸர் இல்லாதுபோனால், அவரால் வேதங்களை விவரிக்க முடியுமா! அப்படி வேதத்தை விவரித்து நமக்குக் கொடுத்திருக்கிறான் பகவான்.

இந்த வேதத்தை தரித்தல் என்பது மிகப் பெரிய **யோகம்.** அதைச் சொல்லுதல் என்பது பெரிய யோகம். அப்படிப்பட்ட வேதமாக பகவான் இருப்பதனாலேதான், 'ஓம் யோகாய நம:' என்று அவனைத் துதிக்கிறோம். 'வேதத்தை' என்று அவனை வேதமாகவே ஆழ்வார் குறிப்பிடுகிறார். சஹஸ்ர நாமமும் 'யோகோ யோக விதாம் நேதா' என்கிறது அவனை.



வேதமாக இருக்கிறான் (யோகோ); வேத வித்துக்களுக்கெல்லாம் தலைவனாக, பிரதானமாகவும் இருக்கிறான் (யோகவிதாம்நேதா). 'வேதத்தின் சுவைப் பயனை' என்றார், ஆழ்வார். வேதத்தை நாம் சுவைத்து உண்ணக்கூடுமானால், அதன் பெரும்பயனாக நமக்கு இருக்கக் கூடியவனும் அவனே.

வேத வித்துக்களுக்கெல்லாம் நேதாவாக, வேதங்களுக்கெல்லாம் ஒரே பொருளாக விளங்கக் கூடியவன் - வேதோ தேவ: சர்வசராசரங்களுக்குள்ளும் உறைபவன், அவனே சர்வபூதேஷு கூட: - இந்த உபநிஷத் வாக்கியத்துக்கு ஏற்ப, சர்வவியாபியாக எங்கும் பரந்து விரிந்து காணப்படுகிறான். இதெல்லாம் நாம் வேத வாக்கியத்தைக் கொண்டுதான் தெரிந்து கொள்கிறோம். வேதமே இல்லை என்றால், அதன் பொருளை எவ்வாறு உணர முடியும்!

**வே**த கண் கொண்டு பகவானை விவரிப்பதுதான் ஈசாவாஸ்ய உபநிஷத்.

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

அது ஆரம்பிக்கிறபோதே 'ஈசாவாஸ்ய' என்றுதான் ஆரம்பிக்கிறது. அதனால் தான் அதற்கு ஈசாவாஸ்ய உபநிஷத் என்றே பெயர்.

இந்தப் பிரபஞ்சம் முழுதும் யாரால் சூழப்பட்டிருக்கிறது என்றால், ஈசுவரனால் பகவானால் - சூழப்பட்டிருக்கிறது. அவனுடையது இது மொத்தம். அதனால் மற்றொருவர் பொருளுக்காக ஆசைப்படாதே. 'எல்லாம் அவனுடையது' என்று நினைத்துக் கொண்டாயானால், இதராளுடைய பொருள் மீது நீ ஆசை வைக்க மாட்டாய். அவனுடைய பொருளை உன்னுடையதாக நினைக்காதே! இதிலே விசேஷார்த்தம் என்னவென்றால் - அவனைச் சேர்ந்த பொருள் இந்த ஆத்மா. ஆத்மா அவனுடையது என்று நினை. ஒரு நாளும் 'யான் எனக்கு உரியவன்; சுதந்திரன்' என்று நினைக்காதே! 'நானும் என் உடைமையும் அவனுக்கே.' என்று அவனுடைய திருப்பணியில் அர்ப்பணிக்க வேண்டும் என்கிற விசேஷார்த்தத்தை இந்த ஈசாவாஸ்ய உபநிஷத்தானது காட்டிக் கொடுக்கிறது.

ஆகையினால், யோக வித்துக்களுக்கெல்லாம் தலைவனாக இருக்கக் கூடியவன் எம்பெருமான்.

யோகம் என்கிற வேதமாகவும், வேதத்தின் பொருளாகவும், வேதத்தின் சுவைப்பயனாகவும், அந்த வேதத்தை உணர்ந்தவர்களுக்கெல்லாம் முன் நிற்கக் கூடியவனாகவும் இருக்கிறான்.

வேதோ வேத விதவ்யங்கோ வேதாங்கோ வேத வித்கவி : என்று பின்னாலே இதை ஸ்பஷ்டமாக விவரிக்கக் கூடிய திருநாமங்கள் வருகின்றன. 'ப்ரம்மண்ய:' 'ப்ராமணப்ரிய:' என்றெல்லாம்கூட பகவானுக்குத் திருநாமம்.

ப்ரும்மம் என்றால் வேதம். அவனே வேதம். ப்ரும்மத்தை உணர்ந்தவன் ப்ராமணன் ஆகிறான். அப்படிப்பட்ட வேதத்தைக் கசடறக் கற்று உணர்ந்

## நான் ரெடி... நீங்க ரெடியா?

**கோ**வை மாவட்டம் சூலூர் வட்டாரத்தில் நடந்த ஊழல் எதிர்ப்பு இயக்கத் தொடக்க விழாவில், இந்திய அளவில் தமிழ்நாடு இரண்டாவது இடத்தில் உள்ளது என்ற செய்தியைக் கேட்டு சந்தோஷப்பட முடியவில்லை. ஏனென்றால், நம்பர் 1 இடம் பிடித்திருப்பது லஞ்சம் பெறுவதில் அல்லவா!

தமிழக ஊழல் எதிர்ப்பு இயக்கப் பொதுச் செயலாளர் செ.மா. அரசு, தமது பேச்சில் "தமிழ்நாட்டில் லஞ்சம் வாங்குவதில் முதலிடத்தில் போக்குவரத்துத் துறையும், இரண்டாவது இடத்தில் காவல்துறையும் உள்ளது" என்று கூறி புளியைக் கரைத்தார்.

கோவை மாவட்ட காவல்துறை கண்காணிப்பாளர் பொன். மாணிக்கவேல் ஐ.பி.எஸ். பேசியதுதான் ஹைலைட்!

"ஊழல் எதிர்ப்பு எனது மூச்சு. லஞ்ச ஒழிப்பில் என்ன பிரச்னை வந்தாலும் எதிர்நீச்சல் போட்டு வெற்றி கொண்டேன். இந்த இயக்கத்தின் முயற்சிகளைப் பார்க்கும்போது, டானிக் குடித்ததுபோல உள்ளது. உங்களோடு சேர்ந்து முழு மூச்சாய் செயலாற்ற நான் ரெடி, நீங்க ரெடியா!" என்று கேட்க, பொது மக்கள் அனைவரும் "நாங்களும் ரெடி" என உற்சாகமாக பதில் தர, மாணிக்கவேல் முகத்தில் ஆயிரம் வாட்ஸ் பிரகாசம்!

"யாராவது லஞ்சம் கேட்டால், எனது தொலைபேசியில் தொடர்பு கொள்ளலாம்" என்று சொன்ன மாணிக்கவேல், தமது செல் நம்பரைத் தர, அனைவரும் குறித்துக் கொண்டது நம்பிக்கை ஒளி தந்தது.

- இரா.செவிபாலன், புவனகிரி




• விழாவில்...

தவர்களிடத்திலே பகவானுக்கு விசேஷ ப்ரீதி; ப்ரியம். 'வேதம் உணர்ந்தவர்களை நித்யம் வணங்கு, ஸேவி' என்று வேதமே சொல்கிறது.

ஒருத்தர் கேட்டார், "சதமானம் பவதி என்று அவர்தான் அக்ஷதை போடணுமா? நானே ஒரு பிடி எடுத்து 'சதமானம் பவதி' என்று மந்திரத்தைச் சொல்லி, தலையிலே அக்ஷதையைப் போட்டுக் கொண்டால் பலன் ஏற்படாதா?" என்றார். அந்த வேதவித்துக்கிருக்கிற பெருமை உனக்கில்லையே! பசுவினிடத்திலே பால் எவ்வாறு இருக்கிறதோ, அப்படி அவரிடத்திலே வேதம் இருக்கிறது. பசுவினிடத்திலே பதினான்கு லோகங்களும் இருக்கின்றன. அது புல்லையும், புண்ணாக்கையும் சாப்பிட்டுவிட்டுப் பாலைக் கொடுக்கிறது... நம்மால் அது மாதிரி புல், புண்ணாக்குச் சாப்பிட்டுப் பாலைப் பொழிய முடியுமா! அவ்வாறே வேதத்தை நன்குணர்ந்து, வேத விகிதமான கர்மாவைப் பண்ணக்கூடிய மகான்களுடைய ஹஸ்தத்தினாலே அக்ஷதை சேர்த்தால், இவர்களுக்கு க்ஷேமம் ஏற்படும் என்பதனால்தான், பெரியோர்களுடைய திருக்கரங்களால் அக்ஷதை சேருங்கள் என்று கேட்பது.

இப்படிப்பட்ட வேத வித்துக்களினுடைய பெருமையை பின்னால் சஹஸ்ரநாமமும் சொல்லப் போகிறது. அவர்களுக்கெல்லாம் நேதாவாய் தலை சிறந்து விளங்கக் கூடியவன் பரமாத்மாவாகிறான்.

இதையெல்லாம் மகான்களான ஆசார்யர்கள் சொல்கிறார்கள்...

யோகிகளுக்குள்ளே இருக்கிறான்; யோக தசையிலே உள்ளுக்குள்ளே இருந்து அதற்கு யஜமானனாக இருக்கிறான் என்பது ஓர் அர்த்தம். வேதப் பொருளாக இருந்து, வேதமாகப் பரந்து விரிந்து விளங்கக்கூடியவன் என்பது ஓர் அர்த்தம் இந்த நாமாவுக்கு.

'வேதமுன் விரித்தான் விரும்பிய கோயில்' என்கிறார் ஆழ்வார். வேதத்தை (முன்பு) விரித்தவன் - உலகத்துக்குக் கொடுத்தவன் - அவன் திருமாலிருஞ் சோலையில் இருக்கக்கூடிய, 'அழகன்' என்ற திருநாமத்தையுடைய எம்பெருமான் என்று கொண்டாடுகிறார் ஆழ்வார்.

ஆழ்வார்களுடைய ஸ்ரீசூக்திகள், ஆசார்யர்களுடைய ஸ்ரீசூக்திகள் என்று எதை எடுத்து ஆராய்ந்தாலும், வேதத்தின் கர்ம காண்டம், பிரும்ம காண்டம் என்று எதை உட்புகுந்து பார்த்தாலும், அந்த பரப்ரும்மத்தின் பெருமை குறைவில்லாமல் நிறைந்திருப்பது ஸ்பஷ்டமாக நமக்கு விளங்கும்.

**குறையொன்றுமில்லை - ஏழாம் பாகம் நிறைந்தது.**

**எட்டாம் பாகம் விரைவில் ஆரம்பமாகும்.**

**முக்கூர் ஸ்வாமிகளின் விஷ்ணு சஹஸ்ரநாம விளக்கப் பேருரை ஒலிப்பதிவுகள் உதவி :**

**ஆஸ்திக சமாஜம்,**
**வீனஸ் காலனி,**
**சென்னை - 600 018.**

# நடிகர்களுக்குச் சம்பளக் கட்டுப்பாடு வருமா?

● சியாமளா ஈஸ்வரன், சேலம்

? சேது சமுத்திரத் திட்டத்துக்கு 'நான் - நீ' என்று போட்டி போடும் தலைவர்கள், காவிரிப் பிரச்னையில் மட்டும் காகித அறிக்கைகளோடு நிறுத்திக் கொள்வது ஏன்...?

! அப்படி காகித அறிக்கையோடு நிறுத்துவதில்லையே! பிரதமரையும் சோனியாவையும் நேரில் போய்ச் சந்திக்கிறார்கள். மத்திய அரசு அலுவலகங்கள் முன் தர்ணா செய்கிறார்கள். அப்புறம் மழை வந்து கிருஷ்ண ராஜ சாகர், கபினி எல்லாம் நிரம்பி, அணைகள் வேறு வழியின்றித் திறக்கப்பட, மேட்டூர் நிரம்ப, "ஆகா... காவிரி நீர் கொண்டுவந்து விட்டோம்" என்று ஒவ்வொரு கட்சித் தலைவரும் மார்தட்டுகிறார். ஆண்டு தோறும் நடப்பதுதானே...!



• உரசலால்...



... விரிசல்!

● இரா. கல்யாணசுந்தரம்,

மதுரை - 9

? ஹாரிபாட்டர் புத்தகத்தில் அப்படி என்ன சுவாரஸ்யம்?

! அதைப் புரிஞ்சுக்க நீங்க பத்து - பதினாறு வயதுக் குழந்தையா மாறணுங்க.

● அ. கஹைறல் ரஹ்மான்,

திருச்சி - 21

? காங்கிரஸ் நீரோட்டம் 38 ஆண்டுகளுக்குப் பிறகும் உயிரோட்டத்துடன் இருப்பதாக ஜி.கே.வாசன் சொல்கிறாரே...?

• ஆழ்ந்த அனுதாபம்!



• முறிந்த கூட்டணி!



! உயிரோட்டம் இல்லாமலா ஒருத்தருக்கொருத்தர் அடிச்சுக்கறாங்க! ஒரே இலக்குடன் ஒற்றுமையாச் செயல்பட்டா, வெறும் உயிரோட்டம் என்பது பெரும் பலமாக மாறும் என்று புரிஞ்சுக்காததுதானே பரிதாபம்!

● ஜி.குப்புசாமி, சங்கராபுரம்

? பீஹாரில் கிரிக்கெட் சங்கத் தலைவராக லல்லுபிரசாத் யாதவ் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளாராமே...?

! பீஹார் கிரிக்கெட் சங்கத்துக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள்!

● ஏ.சுகுமார், காட்பாடி

? ஜெ. தமக்கு மக்களுடன்தான் கூட்டணி என்கிறாரே... இந்தக் கூட்டணி எதுவரை நீடிக்குமாம்?

! ஏற்கெனவே முறிஞ்சுபோச்சே! தில்லிக்குப் போன முதல்வர், இதர கட்சிகளுடன் கூட்டணி பற்றி திறந்த மனத்துடன் இருப்பதாகவும், இன்னும் முடிவு செய்யவில்லை என்றும் பதில்



• நாற்காலி..

...பூஜை!



கூறியிருக்கிறாரே!

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

*? அமிதாப் பச்சனின் ரசிகர்கள் (கொல்கத்தாவில்) அவரது காலணிகளை நாற்காலியில் வைத்து 'குரு பூஜை' செய்திருக்கிறார்களே...?*

! விஜயகாந்துக்குக் கோயிலே கட்டி கும்பிடற ரசிகர்களைவிட அவங்க ஒண்ணும் உசத்தி இல்லே...! தாழ்வு மனப்பான்மையை விடுங்க சிவகுமார்!

● எஸ். அன்புமணி, ஈரோடு

*? பெங்களூர் கோர்ட்டில் நடக்கும் ஜெயலலிதா வழக்கில் ஆரம்பக் கட்டத்திலேயே இத்தனை இழுத்தடிப்புகள் நடக்கின்றனவே... தீர்ப்பு வருவதற்குள் ஒரு மெகா ஸீரியல் பார்த்த அனுபவம் நமக்கு ஏற்பட்டுவிடும் போலிருக்கிறதே?*

! மெகா சீரியல் பகுதி I தமிழகத்தில் நடந்து முடிந்து விட்டது. கர்நாடகத்தில் நடப்பது பகுதி II.

● ஆர். ரமேஷ், மதுரை - 20

*? கலைஞர்-வைரமுத்து உரசலா? விரிசலா?*

! அரசல் புரசலாக வைரமுத்துவே கோடி காட்டியிருப்பதை நோக்க, உரசலால் ஏற்பட்ட விரிசல் என்று தோன்றுகிறது.

● சரஸ்வதி, வேலப்பாடி

*? நடிகர்களுக்கு சம்பளக் கட்டுப்பாடு விதிக்கும் 'தில்லு' நம்ம படத் தயாரிப்பாளர்களுக்கு வருமா?*

! தமிழ் சினிமாவை என்றும் இயக்குவது உச்ச நட்சத்திரங்கள்தான். தயாரிப்பாளர்கள் கூண்டோடு தற்கொலைக்கு முயன்றாலும் இந்நிலை மாறாது. ஆனால் போட்டி-பொறாமை இன்றி ஒன்றுபட்டால் மாறும்.

• ஒரே இலக்கு!



● க.இராமலிங்கம், புதுப்பேட்டை

*? தமிழ்த்தாத்தாவின் வீட்டை அரசுடைமையாக்க,*

**சென்ற ஆண்டு ஜனவரியில் 23 லட்சம் ஒதுக்கி, பிறந்த நாளைக் கொண்டாட தீர்மானம் போட்டு அரசாணை பிறப்பித்தனர். ஒன்றும் செய்யவில்லை. இந்த ஆண்டு 35 லட்சம் ஒதுக்கியிருக்கிறார்கள்... அடுத்த ஆண்டும்...?**

! விலைவாசி ஏறிவிட்டது என்று 23+35 லட்சம் ஒதுக்க முன்வரலாம்!



* இதுவரை...



* அடுத்த ஆண்டும்...!

● **பா.ஜெகன், சென்னை - 35**

**? குஜராத்தில், பெற்றோர் சம்மதமின்றி இனி எந்த காதல் திருமணமும் பதிவு செய்யப்படாது என்று அந்த அரசு அறிவித்துள்ள ஆணை குறித்து...?**

! பெற்றோரை மீற முடிவெடுத்தவர்கள் மஹாராஷ்டிராவுக்கோ, மத்தியப் பிரதேசத்துக்கோ போய் பதிவுத் திருமணம் செய்து கொள்வார்கள்!

● **ஜே.வி.ஜே. கண்ணன், திருச்சி - 8** ❐

**? 'கஜானா காலி' என்று ஆட்சிக்கு வந்தவுடன் வெள்ளை அறிக்கை வெளியிட்ட முதல்வர், தற்போது கஜானா எப்படி நிரம்பியது என்று வெள்ளை அறிக்கை வெளியிடுவாரா...?**

! மாட்டார். அவ்வாறு வெளியிட்டால் கடந்த சில வாரங்களாக எவ்வளவு வேகமாக அது காலி செய்யப்பட்டு வருகிறது என்பது மக்களுக்குப் புரிந்துவிடுமே!

● **இரா.சக்கரபாணி, மதுரை - 7**

**? "வைரமுத்து போன்ற படைப்பாளிகள் மூலம் தமிழ் தன்னை அவ்வப்போது புதுப்பித்துக் கொள்கிறது" என்று நடிகர் சிவகுமார் பாராட்டியுள்ளாரே... வைரமுத்து இல்லாவிட்டால், தமிழ் பாழடைந்து தூசு படிந்தா போயிருக்கும்?**

! தமிழ் பாழடைந்து போயிருக்காது, நிச்சயமாக - ஆனால், இதுவரை ஆராயப்படாத அதன் பரிமாணம் ஒன்று தமிழன்பர்களுக்கு அனுபவிக்கக் கிடைக்காமல் போயிருக்கும்.

● **ஆர்.கே.ராமு, குடியாத்தம்.** ✱

**? 'இஸ்லாத்தின் நற்பெயருக்குக் களங்கம் விளைக்கவே இம்ரானா விவகாரத்தை மீடியா பெரிதுபடுத்தி விட்டது' என்று முஸ்லிம் தனி நபர் சட்ட வாரியம் குற்றஞ்சாட்டியுள்ளதே...?**

! இஸ்லாமுக்குக் களங்கம் ஏற்படுத்த எந்த வெகுஜனப் பத்திரிகையும் எண்ணாது; துணியாது. இஸ்லாத்தின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுகிறது என்றால், அது இம்ரானா விவகாரம் போன்ற நிகழ்வுகளால்தானேயொழிய, அதை எடுத்துக் காட்டும் பத்திரிகைகளால் அல்ல... பத்திரிகைகள் வெறும் நிலைக்கண்ணாடிகள்தான்.

● **பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு**

**? ஆண்டுதோறும் ஐப்பசி பௌர்ணமி அன்று கங்கை கொண்ட சோழபுரம் கோயிலில் உலக நன்மைக்காக காஞ்சி சங்கரமடம் சார்பில் அன்னாபிஷேகம் செய்விக்கப்படுகிறது. சங்கராச்சார்யார் பேரில் உள்ள வழக்குகள் காரணமாக இது நிறுத்தப்படுமா?**

! அன்னாபிஷேகம் நிறுத்தப்படாது. அதை நடத்தி வைக்க ஒரு வேளை ஜயேந்திரர் நேரில் வந்தால் தடுத்து நிறுத்தப்படலாம்! ○

**❐ ரூ. 100/- பரிசு:**

**ஜே.வி.ஜே. கண்ணன்,**
**515, பெரிய கடை வீதி,**
**திருச்சி - 620 008**

**✱ ரூ. 50/- பரிசு:**

**ஆர்.கே.ராமு,**
**22, காளியம்மன் கோயில் தெரு,**
**பிச்சனூர்பேட்டை,குடியாத்தம்,**
**வேலூர் மாவட்டம் -632 602**

# ஜெய ஜெய ஜெயலலிதே!

அம்மா அரங்கத்தில் நுழைந்தபோது சரியாக மணி ஐந்து. பாடகர் பாலமுரளி கிருஷ்ணாவுக்கு 75 வயதானதை ஒட்டி, 'விபஞ்சி' அமைப்பு எடுத்த விழா. தமிழ்த் தாய் வாழ்த்து முடிந்து, பாலமுரளியின் சீடர், திருவாங்கூர் அரசிளங்குமரர் ராம வர்மா, தம் குருவின் மீது 'ஜயா குரு வர்யா' என்ற பாடலைப் பாடியபோது, அவர் குரலில் மென்மை மட்டுமல்ல, இனிமையும் இருந்தது.

ஹம்சத்வனியில் பாலமுரளி 'பரிபாஹி நீ பாதமே' என்று பிள்ளையார் மீது பாட, திரைக்கு முன்னாலேயே அதிகம் அலட்டிக் கொள்ளாமல் புஷ்பாஞ்சலி நிகழ்த்தினார் ப்ரியா ஜெயராமன்.

அடுத்து வந்தது வர்ணம். துக்கிணியூண்டு குட்டிப் பையன் முதல், தோளில் துண்டு போட்ட (எல்லாம் பச்சை நிறம்!) இளைஞர், இளைஞிகள் என்று அரங்கம் முழுக்க 75 பேர். அருணா சாய்ராமும் இதில் அடக்கம்! அகில உலகத்துக்கும் ஆனந்தம் தருபவள் யார்? அம்மா. திரம் மிக்கவள் யார்? அம்மா. (நம்ப 'அம்மா' இல்லை. இந்த அம்மா வேறு, அம்பாள்!) - பாலமுரளி எழுதி, மெட்டமைத்த இந்த கம்பீர நாட்டை வர்ணத்தில், ராகத்தின் ஜீவ ஸ்வரமான காந்தாரம் 75 முறை வருகிறது என்றார் அறிவிப்பாளினி. (யார் யார் எண்ணிப் பார்த்தார்களோ, யாம் அறியோம் பராபரமே!)

மறுபடி ஒரு சீடர் வந்தார் : கல்லூரி முரளி கிருஷ்ணா. 'முரளி கானமு' என்று, குருவின் பேரில் தெலுங்கில், கிட்டத்தட்ட பாலமுரளி குரலிலேயே பாடினார். பாலமுரளி மெட்டமைத் திருப்பாரோ?

இசை ஆராய்ச்சியாளர் பி.எம். சுந்தரம், பாலமுரளியின் முதல் சீடர் என்பது ஆச்சரியமான நியூஸ். ரொம்ப டெக்னிக்கலாக, தாள வாத்ய லய முறைகளை அவர் விளக்க, அதைத் தொடர்ந்து 'விக்கு' விநாயக் ராமின் குடும்பம்



வழங்கிய லயவாத்திய இசையில், அசாத்திய ஓசை! விநாயக்ராமின் கடத்துக்குள்ளேயே மைக் வைத் திருப்பதால், மண் குடத்தின் ஓசைக்குப் பதில், மடார் மடார் என்று மெட்டாலிக் சவுண்டுதான் வந்தது. காது ஜவ்வு கிழிந்து விடுகிற அளவுக்கு இருந்தது ஒலி. ஒரே ஆறுதல் அம்சம், செல்வகணேஷின் கஞ்சிரா. டிரம்மின் ஓசையை ஒரே கையில் எழுப்புகிற லாகவமும், விரல்கள் புரள் கிற வேகமும் பிரமிக்க வைத்தன.

பாலமுரளியின் கச்சேரியைக் கேட்டபோது, அவர் உடலுக்கு வேண்டுமானால் 75 வயது இருக்கலாம், குரலுக்கு 25தான் என்று தோன்றியது. (ஆனால் ஏன் இப்படி அநியாய உச்ச ஸ்தாயியில் பாடி, இருமி, பாடி... அவஸ்தைப்பட வேண்டும்?) ஆரபியில் 'ஸ்ரீசகல கலாதிப' பாடி, ஆபேரியில் 'நகுமோமு' பாடினார். தாமே இயற்றிய 'ஜெய ஜெய

ஜெயலலிதே' பாடலைப் பாடி, அதை முதல்வருக்குச் சமர்ப்பணம் செய்தார்! ராகத்தின் பெயர்? ஜெயஜெயலலிதே தான்! (அதையும் ஒரு சஸ்பென்ஸ் மாதிரி கடைசியில் அறிவித்தார்.) ஜெயலலிதா ராகத்தை ஏற்கெனவே குன்னக்குடி உண்டாக்கிவிட்டதால், பாலமுரளி 'ஜெயஜெய' போட வேண்டியதாகிவிட்டது போலும்!

"நான் இங்கே அவரைப் பாராட்டி கௌரவிக்க வந்தால், அவர் முந்திக் கொண்டு என்னை கௌரவித்துவிட்டார்" என்று நெகிழ்ந்தார் முதல்வர். பாலமுரளியின் பெருமை





களைப் பட்டியலிட்டுவிட்டு, "இவரைப் பாராட்ட ஒரு நாள் போதுமா?" என்று கேட்டு, அவர் பாடலையே நினைவூட்டி, அடுத்த பிறவியில், தாம் அவருக்கு சிஷ்யையாக வந்து கற்றுக் கொண்டு பாடி, சபாஷ் வாங்கப் போவதாகத் தம் ஆசையை வெளியிட்டார் ஜெ!

பிரெஞ்சு அரசாங்க 'செவாலியே' விருது பெற்றதற்குப் பாராட்டிவிட்டு, தமிழக அரசின் சார்பாக 'கந்தர்வ கான சாம்ராட்' என்ற விருதை அளித்தார். தமிழக அரசு இதை பாலமுரளி கிருஷ்ணாவுக்காக மட்டுமே வழங்கியதா, இல்லை, இனி தொடர்ந்து (வேண்டியவர்களுக்கு மட்டும்) வழங்கப் போகிறதா...? தெரியவில்லை.

75 பேர் ஆடிய கருடத்வனி ராக தில்லானா, படு சுமார் ரகம்.

"பாலமுரளி கிருஷ்ணாவின் திறமைக்கு பத்மவிபூஷன் எல்லாம் போதாது. மத்திய அரசுடன் போராடி எப்படியாவது அவருக்கு பாரத ரத்னா கிடைக்கச் செய்வேன்!" என்று அறிவித்தார் ஜெ!

முதல்வரின் ஓவியத்தை மணியம் செல்வன் வரைந்து கொடுக்க, அதை பாலமுரளி, ஜெயலலிதாவுக்கு வழங்கினார்.

பாராட்ட வேண்டிய அம்சம்: குறித்த நேரத்துக்குத் துவங்கி, குறித்த நேரத்தில் நிகழ்ச்சியை முடித்த கச்சிதம்.

நொந்துகொள்ள வேண்டிய அம்சம்: வெளியூர், தனியார் பஸ்களில் வைப்பது போல ஹைடெசிபலில் இசை நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி, ஆடியன்ஸின் செவிப்பறையைக் கிழித்த கொடுமை. (அட்லீஸ்ட், இலவச காது சிகிச்சை முகாம் ஒன்றையும் முதல்வர் சிபாரிசு செய்யலாம்!)

மூன்று மணி நேரம் திளைத்த பாராட்டு மழையில் குளிர்ந்துபோய் இருந்த பாலமுரளி, தம் நன்றி உரையில், "எனக்கு இந்த ஒரு நாள் மட்டும் போதும்!" என்று பலத்த கைத்தட்டலுக்கு இடையே முடித்துக் கொண்டார்!

தேர்தல் பிரசாரத்துக்கு வருவார், தமாஷாயிருக்குமேன்னு பார்த்தால், மனிதர் இப்படி ஒரு நாளோடு முடித்துக் கொண்டுவிட்டாரே!

- சாருகேசி



# "இணைவரால் கிடைத்த அவார்ட்!"

**தாராவை ஞாபகமிருக்கிறதா...? 'இங்கேயும் ஒரு கங்கை' படத்தில் 'சோலை புஷ்பங்களே... என் சோகம் சொல்லுங்களேன்' என்று பாடி அப்ளாஸ் பெற்றவர், இன்றைக்கு 'ஹசீனா' என்ற கன்னட படத்தில் சிறப்பாக நடித்ததற்காக தேசிய விருது வாங்கியிருக்கிறார். சந்தோஷத்திலிருந்தவரை சந்தித்தோம்.**

**செய்தி கேட்டவுடன் எப்படி இருந்தது?**

"ரொம்ப ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தது. சுமார் 20 வருடங்களாக நடிச்சுண்டிருக்கேன்... இப்பத்தான் அறியப்பட்டிருக்கேன்... வெரி ஹாப்பி!"

**விருது கிடைக்கும் என எதிர்பார்த்தீர்களா?**

"ஐஸ்வர்யா ராய், ராணி முகர்ஜி, கொங்கணாசென்... போன்ற சிறந்த நடிகைகளின் பெயரெல்லாமும் போட்டிக்கு பரிந்துரை செய்யப்பட்டதை அறிந்து, 'நமக்கெங்கே'ன்னு நெனச்சுண்டேன். கடைசியில் எனக்கு தேசிய விருது என்றவுடன் என்னால் நம்பவே முடியவில்லை. இந்தப் பெருமை என்னுடைய டைரக்டர் கிரீஷ் காசரவள்ளிக்குத்தான்..."

**ஹசீனாவைப் பற்றி?**

"இது முஸ்லிம் சமுதாயப் பெண்களின் பிரச்னைகளைப் பற்றிச் சொல்லும் உண்மைக் கதை. பானு முஷ்தாக் என்ற பெண்மணி எழுதிய சிறுகதை. ஓர் இந்துப் பெண்ணான நான், முஸ்லிம் பெண்ணாக மாறி நடிப்பது என்பது ஒரு சாலஞ்ச். பயங்கரமாக உழைத்தேன்... ஹசீனா படத்துக்கு சிறந்த காஸ்டியூமுக்கான விருது மற்றும் சிறந்த சமூகப் படத்துக்கான விருதும் கிடைத்திருக்கிறது.

**தமிழில் ஏன் தொடர்ந்து நடிக்கவில்லை?**

"இங்கேயும் ஒரு கங்கை'யில் அறிமுகமானேன். பத்தாவது படிச்சு பாஸாகணும்னு இங்கே வந்தேன். பிறகு இங்கேயே செட்டிலாயிட்டேன்.

**உங்களது திருமண வாழ்க்கை...?**

"காமிராமேன் வேணு தான் என் கணவர். சுமார் 18 வருடங்களாக அவரைத் தெரியும். ஆனால் சமீபத்தில், மார்ச்சில் தான் எங்கள் திருமணம் நடந்தது. பொதுவாக மனைவி வந்த வேளை அதிர்ஷ்டம் என்பார்கள் எனக்கு கணவர் கிடைத்த வேளை நேஷனல் அவார்டு கிடைத்துவிட்டது."

**அடுத்து என்ன ப்ளான்?**

"ஹசீனாவிற்கு விருதுகள் கிடைத்ததில் உற்சாகமாக இருக்கிறது. நிறைய மீனிங் ஃபுல் சினிமா எடுக்கணும். கடவுள் சக்தி கொடுத்தாரென்றால், தமிழிலும் படம் எடுப்பேன். விரைவில் இயக்குநர் ஆகப் போகிறேன்."

அப்படிப்போடு!

**- பெங்களூரிலிருந்து லதாசேகர்**

படம் : **நாகேஷ்**


விலை ரூ.25/- மட்டுமே
விரைவில்...
நீரிழிவு நோயாளிகள் முழு வாழ்க்கை வாழலாம்!
- நம்பிக்கை!
மரபணுக்களின் மாயாஜாலம்!
- அதிசயம்!
எப்படியும் ஒரு குழந்தை!
- பிரமிப்பு!
புற்றுநோய்க்கு புதிய டெஸ்ட்!
- சாதனை!
வைத்தியம் பண்ணிக்க வண்டி கட்டி வர்றாங்க!
- உற்சாகம்!
ஆயுர்வேதத்தில் இத்தனை விஷயங்களா!
- ஆச்சரியம்!
எல்லா!!!களும் சேர்ந்து...
'வாழ்க நலமுடன்'
கல்கி
மருத்துவ மலர் 2005









**மேஷம் :** மன தைரியம் அளிக்கும் வாரம். எதிர்ப்பு, தொல்லைகள் விலகும். வழக்கு வெற்றி காணும். குடும்பத்தில் நல்ல காரியம் நடக்கும். உத்தியோகஸ்தர்கள், கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். வாகனம் வாங்க நல்ல நேரம். வியாபாரிகள் முன்னேற்றம் பெறுவார்கள். ஆரோக்கியம் பாதிக்காது. படிக்கும் இளைஞர்களுக்கு நல்ல காலம். குரு / சனி வழிபாடு அவசியம்.

**ரிஷபம் :** இந்த வாரம் நினைத்தது நடக்கும். வீடு வாசல் வாங்க நல்ல நேரம். புதிய முயற்சிகள் கைகூடும். மாணவ-மாணவிகளுக்கு படிப்பில் மேன்மை ஏற்படும். குழந்தைகள் வழியில் சந்தோஷமான காரியங்கள் நடக்கும். வியாபாரிகளுக்கு நற்பலனை அளிக்கும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்லது நடக்கும். உறவினர்களால் அனுகூலம் ஏற்படும்.

**மிதுனம் :** நன்மை தரும் வாரம். நற்பலன்கள் கூடும். கொடுக்கல் வாங்கல் மேன்மை பெறும். வாக்கு, தனம், கல்வி நற்பலனை அளிக்கும். வீடு மாற்றம், வேலை மாற்றம் ஏற்படலாம். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வியாபாரிகளுக்குத் தொழிலில் இருந்து வந்த மந்தமான சூழ்நிலை மாறி வியாபாரப் பெருக்கம் ஏற்படும். வாக்குவாதம் தவிர்ப்பது நல்லது. குழந்தைகள் வழியில் சுபகாரியம் நடக்கும். குரு / ராகு / கேது வழிபாடு செய்து வரவும்.

**கடகம் :** நன்மை தரும் வாரம். பொருளாதார மேன்மை உண்டாகும். தெய்வ அனுகூலம் இருப்பதால் எதிலும் முதன்மை ஏற்படும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மாணவ - மாணவிகளுக்குப் படிப்பில் முன்னேற்றம் கிட்டும். வியாபாரிகள் நற்பலனை அடைவார்கள். கலைஞர்கள் ஏற்றம் பெறுவார்கள். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். சிலருக்குத் தொழில் ரீதியாக வெளிநாடு செல்லும் வாய்ப்பு வரும். குரு / சனி / ராகு / கேது வழிபாடு செய்து வரவும்.

# நடக்குமென்பார்;

**சிம்மம் :** வெற்றி தரும் வாரம். சுப காரியம் நடக்கும். உல்லாசப் பிரயாணம் உண்டு. வாக்குவாதம் தவிர்க்கவும். குடும்பத்தில் அனுசரணை தேவை. திருமணக் காரியம் கைகூடும். சிலருக்கு நெருக்கமானவர்கள் இடம் மாறிச் செல்வார்கள். கைப்பொருள் மீது கவனம் தேவை. ஆரோக்கியத்தில் கவனம் அவசியம். வண்டி வாகனத்தில் செல்லும்போது எச்சரிக்கையுடன் போவது நல்லது. சனி/ ராகு / கேது வழிபாடு செய்யவும்.

**கன்னி :** எடுத்த காரியத்தில் வெற்றி அளிக்கும் வாரம். வியாபாரம், தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் கிட்டும். மாணவ மணிகளுக்கு படிப்பில் மேன்மை கிட்டும். உயர்கல்விக்காக வெளிநாடு

**3.8.2005 முதல்**
**9.8.2005 வரை**









# தஞ்சை பரத்வாஜ்

செல்ல முயற்சி செய்தால் கைகூடும். திருமணம் கைகூடும். மனக்குழப்பம் இராது. பத்திரிகைத் துறையில் உள்ளவர்கள் நல்ல பலனை அடைவார்கள். உத்தியோக உயர்வு (அ) இடமாற்றம் ஏற்படும். ராகு / கேது / குரு வழிபாடு சிறந்தது.

**துலாம்** : நற்பலன் மிகுந்த வாரம். தனம், வாக்கு கல்வி மேல் ஓங்கும். புதிய வேலை வாய்ப்பு கிடைக்கும். குழந்தைகள் வழியில் சுபநிகழ்ச்சி கைகூடும். ஆரோக்கியம் சீராகும். மன பிரமை தீரும். வியாபாரிகள் புதிய தொழில் தொடங்கலாம்.

# நடக்கும்!

மாணவ மணிகளுக்கும் நற்பலன் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் அடங்கும். திருமணம் ஆகாமல் தடைப்பட்டு வந்தவர்களுக்குத் திருமணம் நடக்கும். குரு / சனி வழிபாடு செய்து வரவும்.

**விருச்சிகம்** : வெற்றி கிடைக்கும் வாரம். திருமணக் காரியம் கைகூடும். வண்டி, வீடு வாசல் வாங்க ஏற்ற காலம். புதிய முயற்சிகள் கைகூடும். மேல் படிப்புக்காக வெளிநாடு செல்லும் வாய்ப்பு சிலருக்கு ஏற்படும். தொழில் செய்பவர்களுக்கு நற்பலன் கிடைக்கும். ஏற்றுமதி-இறக்குமதியில் லாபம் கிடைக்கும். வேலையில் இருப்பவர்களுக்கு வேறு வேலை தானாகத் தேடி வரும். பரிகாரம் தேவையில்லை.

**தனுசு** : சுமாரான வாரம். வேலையில் குழப்பநிலைகளும் இடமாற்றங்களும் ஏற்படலாம். திருமணம் ஆகாமல் தடைப்பட்டு வந்தவர்களுக்குத் திருமண முயற்சிகள் கைகூடும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். வியாபாரிகளுக்குத் தொழிலில் சற்று மந்தமான போக்கு தென்படும். ஆரோக்கியத்தில் கவனம் அவசியம். வண்டி, வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. கொடுக்கல் - வாங்கலில் எச்சரிக்கை தேவை. குரு / ராகு / கேது / சனி வழிபட்டு வருதல் நலம்.

**மகரம்** : நினைத்த காரியத்தில் வெற்றி கிட்டும் வாரம். அயல் தேசம் போகும் வாய்ப்பு வரும். குடும்பத்தில் குதூகலம் நிரம்பி வழியும். வீடு, வாசல், வாகனம் வாங்க ஏற்ற காலம். தெய்வ அனுகூலம் ஏற்படும். சுபச் செலவுகள் இருக்கும். வியாபாரிகளுக்குப் பொருளாதார மேன்மை ஏற்படும்.

**கும்பம்** : எதிர்ப்புகளுக்கு இடையே வெற்றிகள் சேரும் வாரம். திருமணத் தடங்கல்கள் நீங்கி திருமணம் கைகூடும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. பேச்சில் நிதானம் அவசியம். கைப்பொருள் மீது கவனம் வேண்டும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. குரு / ராகு / கேது வழிபாடு செய்து வருதல் நலம்.

**மீனம்** : நற்பலனை அளிக்கும் வாரம். திருமண நிகழ்ச்சிகள் கைகூடும். உத்தியோகஸ்தர்களுக்கு நல்ல வேலை கிடைக்









# பரத்வாஜ் பதில்கள்

● டி.எஸ்.சுவாமிநாதன், புதுடெல்லி

**என் பேரன் பொறியியலில் உயர் படிப்பு படித்திருந்தும் இதுவரை நிலையான வேலை கிடைக்கவில்லை. எப்போது நல்ல வேலை கிடைக்கும்? திருமணம் எப்போது? பெற்றோர் ஏற்பாடு செய்யும் திருமணமா, காதல் திருமணமா?**

உங்கள் பேரனுக்கு ஆகஸ்ட் 2005க்கு மேல் நிரந்தர வேலை கிட்டும். இன்னும் ஓராண்டில் திருமணம் பெற்றோர் பார்த்து வைக்கிறபடி கைகூடும். உறவில் அமையாது.

● ஆர்.வி.ஸ்ரீதர், தென்னூர்

**எனக்கு வரவேண்டிய பணம் வராமல் தடைப்படுகிறது. பணம் திரும்பக் கிடைக்குமா? எப்போது? என் மகனது திருமணம், வேலை பற்றிக் கூறவும்.**

உங்கள் பணம் டிசம்பர் 2005க்குப் பின் வந்து சேரும். உங்கள் மகனுக்கு வெளிநாட்டு வேலைவாய்ப்பு கிட்டும் யோகம் இருக்கிறது. முயன்றால் கிடைக்கும். திருமணம் இன்னும் ஆறு மாதங்களில் நடக்கும் யோகம் இருக்கிறது. மேற்கு திசையிலிருந்து பெண் அமையும்.

● எஸ்.பிரியா, மும்பை - 77

**தற்போது செய்துவரும் வக்கீல் தொழிலிலேயே நீடித்திருக்கலாமா, வேறு வேலை தேடலாமா? வரன் பார்க்க ஆரம்பித்து 6 1/2 வருஷங்கள் ஆகின்றன. எதுவும் அமையவில்லை. பரிகாரம் என்ன செய்ய வேண்டும்?**

வேலையைப் பொறுத்தவரை மாற்றம் அவசியமில்லை. ஜாதகப்படி 33 வயதுவரை சற்று சிரமமான தசையாக இருப்பதால், அதற்குப் பிறகு திருமணம் செய்து கொள்வது நன்மை தரும். பொறுமையுடன் இருப்பது வாழ்க்கையைச் சிக்கலாக்கிக் கொள்ளாமலிருக்க உதவும்.

● எஸ்.எம்.முனைவர் சுல்தானா, திண்டுக்கல்

**என் மூத்த பெண்ணுக்குத் திருமணம் தடைப்பட்டுக் கொண்டே இருக்கிறது. எப்போது கைகூடும்? இரண்டாவது பெண்ணுக்கு எப்போது திருமணம் செய்ய முடியும்?**

உங்கள் இரு பெண்களுக்கும் ஏறக்குறைய இன்னும் ஒரு வருடத்துக்குள் திருமணம் கைகூடும். தொழில் செய்யக்கூடிய நல்ல வரனும் நல்வாழ்வும் அமையும். இரண்டாவது பெண்ணுக்கு மேற்கு திசையிலிருந்து வரன் வந்து அமையும். இரண்டாவது மகளுக்கு ஸர்ப்பதோஷ பரிகாரம் செய்துவிடுவது நல்லது.

● லா.சு. உதயசங்கர், கோவை - 7

**எங்கள் உடல் ஆரோக்கியம், பிற்கால வாழ்க்கை பற்றித் தெரிவிக்கவும்.**

சனி தசை நடப்பதால் இன்னும் இரண்டு ஆண்டுகளுக்கு உடல் நலத்தில் கவனமாக இருப்பது நல்லது. இருக்குமிடம், குழந்தைகள், தொழில் இவற்றில் சிக்கல்கள் வரலாம். வியாழன்று குருவுக்கு தீபம் ஏற்றுவதும், ஆஞ்சநேய நாமாவளி படித்து வருவதும், மன உளைச்சல் வராமல் காக்கும்.

கும். குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும். வீடு, மனை வாங்க நல்ல காலம். தன விருத்தி ஏற்படும். நீண்ட நாட்களாக முடியாத வழக்கு வெற்றி அளிக்கும். வியாபாரிகள் புதிய தொழில் தொடங்கலாம். வரவுகள் கூடும். செலவுகள் குறைந்து பொருளாதாரம் பலப்படும். ராகு / கேது வழிபாடு சிறந்தது. ●

**திருமதி அலமேலு கிருஷ்ணன் எழுதி, எழுத்தாளர் சிவசங்கரியின் தொகுப்பில் வெளிவந்திருக்கும் 'கௌரி கல்யாணம் வைபோகமே' நூலை விமர்சிக்கிறார், சுபம் மேரேஜ் கேட்டரிங் சர்வீஸ் உரிமையாளர் சுபம் கணேசன்.**



# புக் பேங்க்



"நிச்சயத்துல ஆரம்பிச்சு கல்யாணம், கணக்கு வழக்கு பைசல் பண்ற வரைக்கும் ஒரு விஷயம் விடாம எல்லா வழக்கத்தையும் விரிவா ஒரு கல்யாண கைடு மாதிரி இந்தப் புத்தகத்துல எழுதியிருக்காங்க. நாங்க ஒரு கல்யாணத்துல, செயல் வடிவத்துல என்ன செய்றோமோ, அதை எழுத்து வடிவத்துல கொண்டு வந்திருக்காங்க. அதுவும் சக மனுஷன் பேசற மாதிரி எல்லாருக்கும் சிம்பிளா புரியற பாஷை, ஒரே மூச்சுல புத்தகத்தை படிக்க வெச்சுடுது. அப்படியே பத்திரமா பாதுகாத்து கம்ப்யூட்டர், இன்டர்நெட்னு வாழற நம்ம பிள்ளைகளுக்குப் படிக்கக் கொடுக்கணும்னு தோணுது. 1968ல் ஒரு மொத்த கல்யாணத்தையும் ஐயாயிரம் ரூபாயில சுபமா செஞ்சு முடிச்ச கணக்கைப் பார்க்கும் போது ஆச்சர்யமா இருக்கு!

நாலு தலைமுறை பார்த்துட்ட எம்பத்து மூணு வயசு அலமேலு அம்மாள், தன்னோட அனுபவத்துலேர்ந்து எழுதினது. அதை அற்புதமா தொகுத்திருக்கிற சிவங்கரி, கல்யாண நடைமுறைகள் மட்டுமில்லாம போனஸ் டிப்ஸ் மாதிரி, கல்யாணப் பாடல்கள் எப்படிப் பாடறது, சுமங்கலிப் பிரார்த்தனை, சமாராதனை, ஸ்ரீவெங்கடாசலபதி சமாராதனை இதெல்லாம் எப்படி நடத்துறதுன்னு சொல்லித் தர்றாங்க. இதுக்கு முன்னாடி 'பாலங்கள்'னு ஒரு நாவல் எழுதினதுதான், இந்த கைடுக்கு இன்ஸ்பிரேஷன்னு சிவசங்கரி சொல்றாங்க. அதுலேர்ந்து ஒரு அத்தியாயத்தை சாம்பிள் மாதிரி இதுலேயும் கொடுத்திருக்காங்க... அதைப் படிச்சதுமே, முழு நாவலையும் தேடிப் பிடிச்சுப் படிக்கணும்னு தோணுச்சு.

ஒரு கல்யாண வீட்டுக்குப் போய், சுபகாரியத்துல கலந்துக்கிட்டு சந்தோஷமா திரும்பி வந்த திருப்தி கிடைக்குது புத்தகத்தை முடிக்கும்போது."

**'கௌரி கல்யாணம் வைபோகமே'- அலமேலு கிருஷ்ணன்.**
தொகுப்பு: **சிவசங்கரி,**
**வானதி பதிப்பகம்,**
**23, தீனதயாளு தெரு, தி. நகர்,**
**சென்னை - 600 017**

# போட்டுத் தாக்கு!



**பாடலாசிரியர் பா.விஜய்யிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள் :**

1. டி.வி.யில ப்ரோக்ராமைவிட 'விளம்பரம்'தான் ரொம்பப் பிடிக்குமாமே...?

2. உங்களோட பாடல் வரிகளை 'வைர' வரிகள்னு சொல்லலாமா, இல்ல 'முத்து' வரிகள்னு சொல்லலாமா...?

3. ஏதாச்சும் விருது வாங்கணும்னு ஆசையா இருக்கு... யாரைப் புடிச்சா வேலை நடக்கும்னு கொஞ்சம் சொல்ல முடியுமா?

4. கூட்டம் கூட்டறது எப்படின்னு கேப்டனே உங்ககிட்டதான் ஆலோசனை கேட்கறாராமே...?

5. கவிதையூருக்குப் போக உங்ககிட்ட வழி கேட்கக் கூடாதாமே, உண்மையா?

6. உட்கோட்டைக்கும், வடுகப்பட்டிக்கும் இடைவெளி ரொம்ப ஜாஸ்தியாமே...?

7. இன்னமும் உங்க வீட்டுத் தோட்டத்துல 'ஒவ்வொரு பூக்களா'த்தான் பூக்குதா?

8. கோபாலபுரத்து அரசவைக் கவிஞரா உங்களுக்கு முடி சூட்டப் போறாங்களாமே... கோடம்பாக்கத்துக்கு அழைப்பிதழ் உண்டா?

9. 'பன்னிரண்டு புக்கு பா.விஜய்'னு புதுசா ஒரு பட்டம் வாங்கியிருக்கீங்களாமே..?

10. தூக்கத்துல எழுந்து 'கலைஞருக்குத்தான் ஓட்டுப் போடுவேன்'னு நடக்க ஆரம்பிச்சுடுறீங்களாமே... நிஜமா? ●

**– பத்துக் கேள்வி பரமு**


DIVINE HOME™
WOODEN POOJA CABINETS
QUALITY | CLASS | STYLE
Model: SO 3171
Model: CLS
Model: 2558
Divine Beauty For Homes
Model: 06 S + Door
Model: S/O 2780
Model: 010 M + Door
Dealership Enquiry Solicited
MARKETED BY
Vichandra Enterprises
New #14, Madha Church Road, (via) Santhome High Road,
(Behind IOB Santhome Branch), Santhome, Chennai - 600 028.
E-mail: divinehome@touchtelindia.net | Website: www.vichandra.com
Phone: 24611955 Telefax : 52069099 Cell : 9841299669
Time: 10.00 am to 8.30 pm / Open on All Days
Dealers: BANGALORE Floor Care System - Ph: 2536 7241, Cell: 9845042094
CALICUT Gajalakshmi Enterprises - Ph: 2727057